க்கொடுக்கின்ற—கும்பனுஞ்சொல்வான் - கும்பமுனியுஞ்சொல்லுவார்—தேசம் - தேசமும்—காலம் - காலமும் —தடந்திசை - விசாலமாகிய திக்குகளும்—சிந்தனைத்தொழில்கள் - மனச்செயல்களும்—சார்ந்தவெல்லாம் - அடைந்தசகலமும் — அனைத்தையுங்காண்பது - யாவையும்பார்ப்பது—சகத்தை - உலகத்தை—பிரித்துக்காண்கை - பகுத்துப்பார்ப்பதாம்— அதுவும்நம்நாளில் - அப்பிரிவுவெகுகாலமாயுள்ளது— (சிலநாளில) சாந்தமாகிப்போகும் - விடுபட்டுப்போகும்.—(எ-று) (௩௫௨)

{முன்சிரவணமானபடி மனனஞ்செய்து நிதித்தியிற்காக்ஷிப்பட்டானெனல்}

சாந்தமுறவழிவற்றபிரமமாங்கேதனிநிற்குமெனக்கும்பன்சாற்
றலோடும், வேந்தனறிவுற்றுமிகவிளங்கிநின்றான் வெம்மாயைக்
குகைநின்றுவெளியிலானா, னாந்திறமேபணதியறக்கும்பன்சொ
ன்னவதுகுறித்துத் தனதாமித்தற்பதத்தே, காந்தியுறச்சேர்ந்
தொளித்தான்மனமுங்கண்ணுங்கட்டொழியற்றுநிறைந்தான்கண
த்திலாங்கே. *

(இ-ள்) சாந்தமுற - உபசாந்தமடைய— அழிவற்றபிரமம் - நாசமில்லாதபிரமமானது—ஆங்கேதனிநிற்குமென - அவ்விடத்திற்றனிமையாயிருக்குமென்று—கும்பன்சாற்றலோடும் - கும்பமுனிசொல்லவும்—வேந்தன் - அரசனானவன்—அறிவுற்று - ஞானத்தையடைந்து—மிகவிளங்கிநின்றான் - மிகவும்பிரகாசித்திருந்தான்—வெம்மாயைக்குகைநின்று - கொடியமாயாக்கிரகத்திலிருந்து—வெளியிலானான் - வெளிப்பட்டான்—ஆந்திறமே - அப்படியே—பணதியற - கற்பனைநீங்கும்படி— கும்பன்சொன்ன - கும்பமுனியருள்செய்த—அதுகுறித்து—அதைக்கருதி— தனதாமித்தற்பதத்து - தனதாகிய விப்பிரமபதத்தில்—காந்தியுற - ப்பிரகாசமாக —சேர்ந்தொளித்தான் - சேர்ந்தடங்கினான்— மனமும் - மனதையும்—கண்ணும் - பார்வையையும்—கட்டொழ— நிருவசனத்தையும்—அற்றான் - நீங்கினவன்—கணத்தில் ஒருக்ஷணத்தில்—ஆங்கு - அந்தப்பிரமபதத்தில்— நிறைந்தான். பூரணமானான் (எ-று) [இ-உ-க-ம்] சந்தேகம்விபரீதமின்றி யாத்மஸ்வரூபத்தைத் தரிசித்தானென்பதாம். (௩௫௩)

நிதித்தியின்காக்ஷியிற் றுக்கநிவிர்த்தியுந்தடையற்றவா
நந்தமுதலிய வனுபவமுமுண்டாயிருக்குமோவென்

## ஞானசிரியரனுபவம் வினவுதல்.

ஒருமுகூர்த்தமிருந் துணர்ந்து விழித்தலோடு முயர்கும்பனுரை
செய்வானுளதாய் நன்றாய், நிருமலமாய்ச்சுத்தமாய் மிகமெத்தெ
ன்று நிருவிகற்பங்களுக்கெல்லா நிலையமாகித், திருமிகுமிப்பத
த்திலேசுகமாய்த் துன்பந்தீர்ந்தனையோவுள் ளுணர்வுதெளிவுற்றா
யோ, வருமயக்கமொழிந்தனையோ ஞேயநன்றா யறிந்தனையோ
காண்டபனகண்டனையோவென்றான். *

(இ-ள்) ஒருமுகூர்த்தமிருந் துணர்ந்து-இருகடிகை நிதித்தியி
லிருந்தறிந்து—விழித்தலோடும்-(அரசன்) விழித்தமாத்திரத்தி
ல்—உயர்கும்பனுரைசெய்வான்- மேலான கும்பமுனிசொல்லு
வார்—உளதாய்-உள்ளதாகியும்—நன்றாய்-நன்றாகியும்—நிரும
லமாய்-நிருமலமாகியும்—சுத்தமாய்-பரிசுத்தமாகியும் — மிக
மெத்தென்று-மிகவுமிருதுவாகியும் — நிருவிகற்பங்களுக்கெல்
லாம் நிருவிகற்பங்களனைத்திற்கும்—நிலையமாகி- நிலையாகவு
மிருக்கின்ற—திருமிகும் செல்வமிகுந்த—இப்பதத்தில்-இந்தப்
பிரமபதத்தில்— சுகமாய் - ஆநந்தமாகி— துன்பந்தீர்ந்தனை
யோ-துக்கநீங்கினையோ—உள்ளுணர்வு-ஆத்மஞானத்தால —தெ
ளிவுற்றாயோ-தெளிவடைந்தாயா — வருமயக்கமொழிந்தனை
யோ-வராநின்ற பிரமை நீங்கினையோ — ஞேயநன்றாயறிந்தனை
யோ-அறியத்தக்கதைநன்றாயறிந்தாயோ—காண்டபன கண்டனை
யோவென்றான் - பார்க்கவேண்டியதைப்பார்த்தாயோவென்று
கேட்டார்.—(எ-று) (௱௫௪)

(பெற்றவனுபூதியின்விலாசத்தைச்சொல்லுதல்)

நரபாலனதற்குரைப்பான்பகவனே நின்னருளாலே பெருஞ்செ
ல்வநலத்தான்மிக்குப், பரமாகியவனைத்திற்குமேலாய் விஞ்சுபதங்
கண்டேன்கோவகோபரமஞானந், திரமானபெரும்பெரியோர்
கூட்டங்கூட்டாத்தெள்ளமுதாய்ப்பேரின்பந் தேறநல்கு, வர
மாநின்கூட்டத்தாலொருகாலத்தும்வாராதநல்லமுது வரப்பெ
ற்றேனால். *

(இ-ள்) நரபாலன்-அரசனானவன்—அதற்குரைப்பான் - அதற்கு
ச்சொல்லுவார்—பகவனே- பகவானே—நின்னருளால்-உமதுகி
ருபையினால்—பெருஞ்செல்வநலத்தால்-மகாசம்பத் தாகியவின்
பத்தினால்—மிக்குப்பரமாகி- மிகவுமகத்தாகி—அனைத்திற்குமே
லாய்-சகலத்துக்குமுயர்வாகி—விஞ்சுபதங்கண்டேன்- மிஞ்சிய
பரமபதத்தையறிந்தேன்—அகோவகோ- ஆச்சரியமாச்சரியம்

—பரமஞானந்திரமான-பிரமஞானத்தைத்திடமாகப்பெற்ற—பெரும்பெரியோர்-மகத்துக்கள்—கூட்டங்கிட்டா-குழாத்தையுமடைந்து—தெள்ளமுதாய்ப்பேரின்பந்தேங்கதல்கும்-தெளிவானவமுதமாய்ப்பேரானந்தத்தை நிறையக்கொடுக்கின்ற—வசமாநின்கூட்டத்தால்-வசமாகியவுமதுசங்கத்தினால்—ஒருகாலத்தும்வாராதநலமுது-ஒருபொழுதுங்கிடையாதபராவமுதத்தைவைப்பெற்றேன்-அடையப்பெற்றேன்—(எ-று) (௱௫௫)

(சென்றகாலத்துக்கிரங்கிவினைவுதலுக்குத்தரங்கூறல்)

அனந்தமாமிவ்வமுதமெனக்குமுன்னளிதானதென்ன வெனக்கும்பன் சொல்வான், மனந்தனிலெசாந்தியாய்ப்போகங்கைத்துவன்பொறிமீண்டுளமடைமையாய்ந்தபோதே,புனந்தருசெங்குசும்பைநீரமூக்குப்போனபுடவையிலேலே நிறமுறல்போற் புதல்வர்நெஞ்சிற், கனந்தருநற்குருவசனங்கலந்து நன்றாங்காயமலங்களுமரத்தின்காய்கள்போற்போம். *

(இ-ள்) அனந்தமாம்-அளவில்லாததாகிய—இவ்வமுதம்-இந்தப்பாரமுதமானது—எனக்கு-அடியேனுக்கு—முன்னாள்-பூர்வத்தில்—அரிதானதென்னவென-அரியதானதென்னவென்றகுன்கேட்க—கும்பன்சொல்வான்-கும்பமுனிசொல்லுவார்—மனந்தனிலேசாந்தியாய்-மனதிற்சாந்தமடைந்து—போகங்கைத்து-போகத்திற்கசப்புவந்து—வன்பொறிமீண்டு-வலியவிந்திரியங்களகத்திற்றிரும்பி-உளமடைமையாய்ந்தபோதே-மனவஞ்ஞானநசித்தபோதே—புனந்தரு-வனத்திலுண்டாகும்—செங்குசும்பைநீர்-சிவந்த குசும்பாசலமானது — அழுக்குப்போனபுடவையில்-களங்கமற்றவஸ்திரத்தில்—நிறமுறல்போல்-ஒளிவடைவதுபோல—புதல்வர்நெஞ்சில்-சீடனுடையமனதில்— கனந்தரும்-மேன்மையான—நற்குருவசனம்-சற்குருவாக்கியம—கலந்து நன்றாம்-கலந்து நன்மையாகும்—காயமலங்களும்-தேகத்திலுள்ள களங்கங்களும்—மரத்தின்காய்கள்போல்-விருட்சத்தினதுகனிகளைப்போல—போம்-(நழுவிப்) போகும்.—(எ-று)

(இங்ஙனம்பெற்றவனுபவப்படி ஸ்திரமாய்நிற்பாயெனல்)

உள்ளத்திலிருமையெனவொருமையென்னவுன்னுதலஞ் ஞானமின்மையாமிதன்ஞானந்; தெள்ளுற்றகதியுமது தெளிந்துமுத்திசேர்ந்தனைசித்தமும்விட்டாய்செல்வனாகித், தள்ளுற்றமலநீங்கிமௌனியாகித்தனிநிற்பாயென்றனுமேதமையுணர்ந்தோர்,கை

ள்ளூற்றதொழிலெல்லாமனத்ததன்றே கொள்மனமன்றியினட-
க்குங்கொள்கையென்றே. ❋

(இ-ள்) உள்ளத்தில்-மனதில்— இருமையென-இரண்டென்று-
ம்—ஒருமையென்ன. ஒன்றென்றும்—உன்னுதலுஞ்ஞானம் -நி-
னைத்தலேயஞ்ஞானமாம்—இவையொழிதன்ஞானம்-இவ்விரண்-
டுநீங்குதலேஞானமாகும் —பேரின்றுற்றகதியுமது-பேரின்பமான
பாகதியுமதுவேயாகும்—தெளிந்துமுத்திசேர்ந்தனை-தெளிவுற்-
றுமோக்ஷத்தையடைந்தாய்— சித்தமும்விட்டாய்-மனதையுந்-
துவிர்த்தாய்—செல்வனுகி-(ஞான)சம்பத்தையுடையவனுய்—த-
ள்ளூற்றமலநீங்கி-தள்ளப்பட்டகளங்கத்தைவிட்டு— மௌனியாகி-மகாமவுனியாய்—தனித்திருப்பாயென்றலும்-தனித்திருப்பாயென்றுகும்பமுனிசொல்லவும்—தமையுணர்ந்தோர்-சீவன்முத்தர்கள் — கொள்ளூற்றதொழிலெல்லாம்-கொள்ளப்பட்டசெயல்களனைத்தும் — மனத்ததன்றே-மனதினாலல்லவா —கொள்மனமன்றியில்-கொள்ளப்பட்டமனதையன்றி—நடக்குங்கொள்கையென்றோ-நடக்குந்தன்மையாது.—(எ-று) (௩௫௮)

{ சமாதியிற் றியானித்தன்முதலிய தொழின் மனதைய
ன்றியெங்ஙனங்கூடுமெனிலதற்குத்தரங்கூறல்- }

உரையெனமன்னவன்கேட்பக் கும்பன்சொல்வா னுளமென்று
சொன்னதுவேறொன்றுமன்று, களையறுபல்பவந்தருவா தனை
யேவுள்ளங்கண்டதனையறிந்தாலக்கவலையில்லை, வளையறக் கண்
டவர்கருமங்களிற்சரிக்கும்வாதனைதான்மறுபிறப்பை வழங்காத
ந்தப், புரைமனஞ்சத்துவமென்பர்சித்தமென்று போதமில்லா
ச்சித்தத்தைப்புகல்வரன்றே. ❋

(இ-ள்) உரையென-சொல்லவேண்டுமென்று — மன்னவன்
கேட்ப-அரசனானவன்கேட்க—கும்பன்சொல்வான்-கும்பமுனி
சொல்லுவார்—உளமென்றுசொன்னது-மனமென்று சொல்லி
யது—வேறொன்றுமன்று-மற்றொன்றுமல்ல— களையறுபல்ப
வந்தரு-அளவற்றசநநங்களைக்கொடுக்கின்ற—வாதனையேவுள்ள
ம்-வாசனையேமனமாம்—கண்டதனையறிந்தால்-காணப்பட்டத
ன்னைத்தெரிந்துகொண்டால்—அக்கவலையில்லை- அந்தவச்சமில்
லை—வளையறக்கண்டவர்-தடையறப்பார்த்தவர்கள் — கருமங்க
ளிற்சரிக்கும்-கருமங்களிற்சஞ்சரிக்கின்ற— வாதனைதான்மறுபி
றப்பைவழங்காது-சுத்தவாசனை மறுபவத்தைக்கொடாது— அ
ந்தப்புரைமனம்-அவ்வுயர்வுள்ளமனதை—சத்துவமென்பர்-சா

த்துவிதமென்றுசொல்லுவார்கள் — போதமில்லாச்சித்தத்தை—ஞானமில்லாதமனதை — சித்தமென்றுபுகல்வர்-மனமென்றுரைப்பர்.—(எ-று) (௩௰௮)

(இதுவுமது)

ஞானமனஞ்சத்துவமேயென்றுசொல்வர் ஞானமிலாதார்சித்த நடையினிற்ப; ஈனமறுஞானிகள்சத்துவத்தேநிற்பரோதொன்று சுவர்க்கம்வீ டெல்லாநல்கு; மானவையெல்லாம்விட்டுச்சமமா ஞ்சோதியானாலேதாகுதிங்கதுநீயாகு; மூனமுறுபொருளொ ன்றுங்கைக்கொளாமலுள்ளமசைவறநிற்பாயுறுதியாக. *

(இ-ள்) ஞானமனம்-ஞானமுள்ளமனதை — சத்துவமேயென்றுசொல்வர்-சாத்துவிதமேயென்றுசொல்லுவார்கள் — ஞானமிலாதார்-ஞானமில்லாதவர்கள் — சித்தநடையினிற்பர்- மனதிநடையிலிருப்பார்கள் — ஈனமறுஞானிகள்-குற்றமற்றஞானவான்கள் — சத்துவத்தேநிற்பர் - சாத்துவிகத்திலிருப்பார்கள் — ஏதொன்று-யாதொன்று — சுவர்க்கம்வீடு - சுவர்க்கமும்மோக்ஷமுமாகிய — எல்லாநல்கும்-இவைகளனைத்தையுங்கொடுக்கின்றதோ — ஆனவையெல்லாம்விட்டு - ஆகியவச்சகலத்தையுந்தள்ளி — சமமாஞ்சோதியானால் - சமமானசுயம்ப்ரகாசமானால் — ஏதாகுதி - ஏதாகின்றதோ — இங்கு - இவ்விடத்தில் — அதுநீயாகும் - அதுவேயுனதுஸ்வரூபமாகும் — ஊனமுறுபொருள்-ஈனமாகியபதார்த்தங்கள் — ஒன்றுங்கைக்கொள்ளாமல் ஒன்றையுங்கைவசப்படுத்தாமல் — உள்ளமசைவற-மனச்சலனமில்லாமல் — உறுதியாக - திடமாக — நிற்பாய் - இருப்பாய் — (எ-று) [இ-உ-க-ம்] வாசனாரூபமானமனமிரண்டுவிதமாமவற்றுள் இராசததாமசத்துடன்கூடி வெளிமுகத்தில் அறிவின்மையாகச்செய்யுந்தொழிலாற்பவத்தைக்கொடுக்குமனதுக்குமனமென்றுபேர்சத்துவத்துடன் கூடியகமுகத்தின் ஞானமயமாய்ச் செய்யுங்கிரியையான் முத்தியைக்கொடுக்குமனதுக்குமனமெனப்பெயரின்றாகாதலா லவ்விரண்டையுநீக்கிமகாவாக்கியார்த்தப்படிசலனசலனமின்றிச் சுயஞ்சோதியேநீயாய்விளங்குவாயென்பதாம் (௩௰௯)

பிரமத்திலுண்டானஸ்புரணம்பிரமமாய்விளங்குதென்ப தைக்கையாண்டொருமையாய்ச்சமாதி யடையுநியமித் தஞ்சலனசலனமின்றிய யைக்கியங்கூடும் விதமெங்ஙன மெ ன்னிலதற்குத்தரங்கூறல்

நெஞ்சிலாதவர்பிறவிநெடுந் தூரம்போ நீணிலத்திறலுயவொன்

றுநேர்ந்ததல்ல, வஞ்சுமனமசைதலி லுண்டானதாகுமசைவசை
யாமைகளிரண் டிமயிக்கமாக்கிச் சஞ்சலமாற்றிச்சித்தாம் படி நி
ல்லெனத்தரணிபன் சொல்வானயிக்கஞ்சார்வதெங்ஙன், விஞ்சு
மசைவசையாமையிரண்டுமொன்றாய்விடும்படி சொல்லெனக்கு
ம்பன் விளம்பலுற்றான். *

(இ-ள்) நெஞ்சிலாதவர்பிறவி-மனமில்லாதவர்கள்பவம்—நெ
டுந்தூரம்போம்-வெகுதூரத்திற்செல்லும்—நீணிலத்தில் நீண்ட
பூமியில்—துயரொன்றுநேர்ந்ததல்ல- துன்பமானதுசற்றுநே
ரிடாது—அஞ்சுமனம்-பயப்படுகின்றமனமானது— அசைதலி
லுண்டானதாகும்- சஞ்சலத்திலுண்டானதாகும்—அசைவு-அ
சைதலும்—அசையாமைகள்- அசையாமைகளுமாகிய—இரண்
டுமயிக்கமாக்கி-இரண்டையுமொன்றாக்கி—சஞ்சலமாற்றி-சஞ்ச
லத்தைக்கெடுத்து—சித்தாம்படி - ஞானமாகும்படிக்கு—நில்
லென- நிற்பாயென்றுகும்பமுனிசொல்ல—தரணிபன்சொல்
வான்-அரசன்சொல்லுவான்—அயிக்கஞ்சார்வதெங்ஙன்- அயிக்
கியமடைவதெப்படி—விஞ்சுமசைவு-மிகுந்தவசைவும்—அசை
யாமை-அசையாமையும்—இரண்டுமொன்றாய்- இரண்டுமொன்
றாக—விடும்படிசொல்லென-நீங்கும்படிசொல்லுவாயென் றர
சன்கேட்க—கும்பன்விளம்பலுற்றான் - கும்பமுனிசொல்லத்
தொடங்கினார்.—(எ-று) (௱௬௰)

(இதுவுமது)

உவரிநீர்போலுலகெல்லாமொன்றானவுணர்வுமாத்திரமதுதானு
ற்றபுந்திக், கவர்வுறுதலாலசையுநிறையநீர்தான் கல்லோலத்தா
லசையுங்கணக்கேபோலச், சிவமுணர்வுமாத்திரமெய்ப்பிரமமா
கித்திரள்பெயராய்ப்புகல்பொருளைச்சகமென்றெண்ணித், தவ
மறுபேதைபடர்காண்பரிவுதானேசற்றசைந்தமாத்திரத்தாற்சரு
க்கமுண்டாம். *

(இ-ள்) உவரிநீர்போல்-சமுத்திரத்தின்சலத்தைப்போல— உ
லகெல்லாம்-சகங்களனைத்தும்—ஒன்றான - ஏகமாகிய—உணர்வு
மாத்திரம் சின்மாத்திரமேயாகும்—அதுதான்- அச்சின்மாத்திர
மானது—உற்றபுந்தி-பொருந்தியபுத்தியை— கவர்வுறுதலால்-
கிரகித்தலினால்—நிறையநீர்தான்-நிறைந்தசலமானது—கல்லோ
லத்தால்-பேரலையினால்—அசையுங்கணக்கேபோல- அசைகின்ற
தன்மையைப்போல—அசையும்-சஞ்சரிக்கும்—சிவம்- சிவமும்
—உணர்வுமாத்திரம்-சின்மாத்திரமும்—மெய்-சத்தியமும்—பி

ரமமாதி-பிரமமுதலாகிய—திரள்பெயராய்-அநேகநாமங்களையு
டையதாய்—புகல்பொருளை-சொல்லிய(பர)வஸ்துவை — சக
மென்றெண்ணி - உலகமென்றுமதித்து—தவமறுபேதையர்கா
ண்பர்-நிஷ்டையற்றமூடர்கள்பார்ப்பார்கள்—அறிவுதான்- சித்
தானது—சற்றசைந்தமாத்திரத்து-கொஞ்சமசைந்தமாத்திரத்
தில்—சருக்கமுண்டாம்-சகசிருட்டியுண்டாகும்.(எ-று)(௱௯௧)

(இதுவுமது)

உண்டானசிருட்டி தானன்றுப்பார்க்கி லொழிந்துபோ முறுதி
யாயுணராவாற்றாற், கண்டார்கள்கயிற்றிலேபாம்பென்பார்போ
ற்காட்சியுறுங்கலைநூலாற்கற்றோர்சார்வாற், றண்டாத பரிசயத்
தாற்சிலகாலத்திற்றாவுமனநின்மலமாய்ச் சசிபோனிற்கிற், பண்
டாயவனுபூதிமயமாய்த்தானே பாக்கியவான்களுக்கிந்தப் பார்
வைதோன்றும். *

(இ-ள்) உண்டானசிருட்டிதான் - தோன்றினசகசிருட்டியை
—நன்றுப்பார்க்கில் - ஞானசுகமாகப்பார்த்தால்—ஒழிந்து
போம் - அழிந்துபோகும்—உறுதியாய்-திடமாக— உணரா
வாற்றால்-அறியாததன்மையினால்—கயிற்றில்-பழுதையில்—பா
ம்பென்பார்போல் - சர்ப்பமென்பவர்களைப்போல—கண்டார்க
ள்-திரிஸ்யமாகப்பார்த்தார்கள்—காக்ஷியுறும்- ப்ரத்யக்ஷமாகின்
ற—கலைநூலால் - ஞானசாஸ்திரங்களினாலும—கற்றோர்சார்வா
ல்-சாதுசங்கத்தினாலும்—தண்டாதபரிசயத்தால்-தடையற்ற வ
ற்பியாசத்தினாலும்—சிலகாலத்தில் - சிலநாட்களில்—தாவுமன
ம்-பாயாநின்றமனமானது—நின்மலமாய் - விமலமாக—சசி
போனிற்கில்-சந்திரனைப்போலநின்றால்—பண்டாய - பழமை
யான—அனுபூதிமயமாய்த்தானே- அனுபூதிமயமாகவே—பா
க்கியவான்களுக்கு-ஞானசம்பத்துள்ளவர்களுக்கு—இந்தப்பா
ர்வைதோன்றும்-இந்தத்திருஷ்டிதோற்றம்.—(எ-று) [இ-௩-௧-
ம்] உததியும்புனலும்போலச் சுயஞ்சைதன்யமுமதன் ஸ்புரண
மும் விளங்குதேயன்றி வேறின்றெனக் காரணத்தைத் தரிசித்த
துவாக நிற்கிற் காரியமுமதுவாகவிளங்குமப்போது சலனாசல
னமின்றி யைக்கியமான நிருவிகற்பசமாதி கூடுமென்பதாம்.

சமாதியிற்றனதனுபூதியினின்று ஸ்புரிக்கின்
ற ஸ்புரணமெதிரிடாமற்றன்மயமாக்கிக்கொள்ளென
ச் சமாதியில்வைத் தஃதுகூடிநிமித்தந் தனியேயவை

க்க நினைத்தல். (வேறு)

உலகதனுதயநாசமுண்மையையுணர்த்தேனித்தை ........ *
நலனுறச்செய்துநாடிநழுவுறுநயந்தவண்ணம்..... .... ... *
விலகலற்றெதிர்ந்தவெல்லாமெய்ப்பதத்தாக்கிநிற்பாய்......*
திலகமாஞ்சொன்னநாடுசேர்வனுங்காலமீதே ... ......*

(இ-ள் உலகதன்-சகத்தினுடைய—உதயநாசம்- உற்பத்திலயத்தின்—உண்மையையுணர்த்தேன்-தத்துவத்தைச்சொன்னேன்—இத்தை-இந்தவருத்தத்தை—நலனுறச்செய்து- சுகமுண்டாகவற்பியாசித்து—நாடி-சிந்தித்து—நழுவுறு-வழுவாமல்—நயந்தவண்ணம்-விரும்பியபடி—விலகலற்று- நீங்குதலில்லாமல்—எதிர்ந்தவெல்லாம்-நேரிட்டவனைத்தையும்— மெய்ப்பதத்தாக்கிநிற்பாய்-பிரமபதத்துக்காகச்செய்திருப்பாய்— திலகமாம்-(சகலத்துக்குந்)திலதமாகிய—சொன்னநாடு - சுவர்க்கலோகத்தை—நான்சேர்வன்-யானடைவேன்—ஈதுகாலம்- இதுவேகாலமாம்.— எ-று) (௱௯௫)

(இதுவுமது)

அயனுலகினும்பொன்னாடுற்றங்கெனைக்காணுனென்னிற் ... *
பயமுறமுனியுமெந்தைநாரதன்பரிந்தமைந்த..... ...... *
ருயர்குருமுனியப்பண்ணவொருசற்றுமொண்ணாமன்னா .. *
மயலறப்பேதநீக்கிமகிழ்ந்திதைநோக்கிநிற்பாய் ..........*

(இ-ள்) அயனுலகினும்-சத்தியலோகத்தினின்றும்— பொன்னாடுற்று-தெய்வலோகத்தையடைந்து—அங்கு-அவ்விடத்தில்—எனைக்காணுனென்னில்-என்னைப்பார்க்கானுயின்—எந்தை- எனதுபிதாவாகிய—நாரதன்- நாரதமுனியானவர்—பயமுறமுனியும் பயப்படும்படிகோவிப்பார்—பரிந்தமைந்தர்- அன்புள்ளவீடர்—உயர்குரு-மேலானவாசாரியனா—முனியப்பண்ண- கோபம்வரும்படிசெய்ய—ஒருசற்றுமொண்ணா எவ்வளவுங்கூடாது—மன்னா-அரசனே—மயலற - மயக்கமில்லாமல்—பேதநீக்கி-வேற்றுமையைக்கெடுத்து—மகிழ்ந்து-சந்தோஷித்து—இதை நோக்கிநிற்பாய்-இந்தத்திருட்டியிலிருப்பாயென்று கும்பமுனி சொன்னார்.— எ-று) [இ-௨-௧-ம்] நிருவிகற்பசமாதி கூடுநெறியை யறிவித் தகன்றனனென்பதாம். (௱௯௬)

நிறித்தியிற்கண்ட பேரானந்தபோதமே தானாக வியப்புறுதல்.

போதுநாமென்னக்கும்பன்மறைதலும்பூபனெண்ணுஞ்.....*

சீதளஞ்சுத்தஞ்சாந்தந்தெள்ளமுதூறலொக்கு .. .... ....*
யீதொருபதவியென்னுளிருந்தவாவென்னேயென்னே .... *
கோதிலென்சத்துவத்திற்குளிர்வுறச்செய்ததென்றான் ...... *

(இ-ள்) நாம்போதுமென்ன-யாம்போகின்றேமென்று—கும்பன்மறைதலும்—கும்பமுனியானவர் மறையவும்—பூபனென்னும்-அரசனானவனினைக்கின்றான்—சீதளம்-குளிர்ச்சியாகியும்—சுத்தம்-பரிசுத்தமாகியும்—சாந்தம்-உபசாந்தமாகியும்—தெள்ளமுதூறலொக்கும் - தெளிந்தவமுதவூற்றுக்கொப்பாகியுமிருக்கின்ற—ஈதொருபதவி-இந்தவொப்பற்றபதவியானது—என்னுள்ளிருந்தவா-எனக்குள்ளிருந்தவிதம் — என்னேயென்னே - ஆச்சரியமாச்சரியம்—கோதிலென்-குற்றமற்றவென்னை—சத்துவத்தில்-சத்தாமாத்திரத்தில்— குளிர்வுறச்செய்ததென்றான்-விஸ்ராந்தியடையச்செய்ததென் றரசன்சொன்னான். (எ-று)

(வியப்புற்றபடிசமாதிகூடல்)

ஆனவாதனைகளின்றியசைவற்றுப்பேராருகி .............. *
மோனமாய்நிருவிகற்பமாய்ப்பற்றுமுற்றுமற்று .. ......*
தானமேயமர்ந்துகற்போற்றருவைப்போற்சுவர்போனின்றான்*
போனசூடாலைபண்டைப்பொற்கொடிவடிவமெய்தி ... ......*

(இ-ள் ஆனவாதனைகளின்றி-உண்டாகியவாதனைகளிறந்து—அசைவற்று-சலனமற்று—பேராருகி- நிலையினீங்காதவனாய்—மோனமாய்-மௌனமாகியும் நிருவிகற்பமாய்- நிருவிகற்பமாகியும்,பற்றுமுற்றுமற்று-இச்சையனைத்துமற்ற— தானமேயமர்ந்து-இடத்திலமர்ந்து—கற்போல்-கல்லைப்போலவும்— தருவைப்போல்-மரத்தைப்போலவும்—சுவர்போல்- மதிலைப்போலவும் — நின்றான்-(சமாதியி)லிருந்தான் —போனசூடாலை-சென்ற(கும்பமுனியென்னுஞ்) சூடாலையானவள்—பண்டைப்பொற்கொடிவடிவமெய்தி-முன்னழகிய புட்பக்கொடிபோன்ற தனதுருவமடைந்து.—(எ-று) [இ உ-க-ம்] ஆசாரியரனுக்கிரகத்தி லனுபவமான தனதுஸ்வானுபூதிமாத்திரமாய் நிருவிகற்பசமாதியடைந்தனனொன்பதாம். (௱௯௯)

(ஆசாரியர்சென்று பின்னுமெழுந்தருளுதல்)

அம்பரத்தேகியந்தப்புரம்புக்காளவனிகாவ...... .... ...*
னம்பமென்றுகாத்தாணடந்ததுவருடமூன்று........ .... *
கும்பனுய்க்கணவன்காட்டைக்குறிகியாங்கவனைக்கண்டா ...*
டம்பமாய்நிருவிகற்பசமாதியிலிருத்தல்கண்டு........... *

(இ-ள்) அம்பரத்தேகி-ஆகாயத்திற்போய் — அந்தப்புரம்புகுந்தாள்-அந்தப்புரத்திற்புகுந்தாள் — அவனிகாவல்-பூமிபாலனம் — நம்பாரமென்றுகாத்தாள்-நமதுபாரமென்றிரட்சித்தாள் — வருடமூன்றுநடந்தது-மூன்றுவருடஞ்சென்றது — கும்பனும்-திரும்பவும் கும்பமுனியாய் — கணவன்காட்டைக்குறுகி- தலைவனிருக்குமிடத்தையடைந்து — ஆங்கவனைக்கண்டாள்- அவ்விடத்திலேயவனைப்பார்த்தாள் — தம்பமாய்நிருவிகற்பசமாதியிலிருத்தல்கண்டு-தூணைப்போல நிர்விகற்பசமாதியிலிருக்கையைப்பார்த்து.—(எ-று) (௱௯௭)

(சமாதியிலசைவற்றிருத்தலைப்பார்த்தாலோசித்தல்)

அறிவிப்போமென்றுசிங்கநாதத்தாலார்த்தமட்டிற் ........*
பொறியுற்றநிலைமேன்மேற்றொனித்தவள்பூபன்றன்னை .....*
மறியத்தள்ளநகலும்படிவீழ்ந்துமறிந்திலன்மற்றென்னென்று *
நெறிப்புக்குங்கும்பன்மேனிநேரிழைநினைப்பதானாள் .....*

(இ-ள்) அறிவிப்போமென்று- நமதுவரவைத்தெரிவிப்போமென்று — சிங்கநாதத்தால்-சிங்கத்தொனியினால் — ஆர்த்தமட்டில்- சத்தித்தவளவிலும் — பொறியுற்றநிலை- அதிர்ந்தநிலை — மேன்மேற்றொனித்து-மேலுமேலுஞ்சத்தித்து — இவள் சூடாலையானவள் — பூபன்றன்னை - அரசனை — மறியத்தள்ளும் - கவிழும்படிதள்ளவும் — வீழ்ந்துமறிந்திலன்- கீழேவிழுந்துமுணர்ந்திலன் — மற்றென்னென்று - இதென்னவென்று — நெறிப்புக்கும்-கிரமமாக வாழ்விக்கின்ற — கும்பன்மேனி- கும்பவடிவத்தையுடைய — நேரிழைநினைப்பதானாள் - சூடாலையானவளெண்ணத்தொடங்கினாள்.—(எ-று) (௱௯௮)

(இதுவுமது)

உத்தமன்றற்பதத்தோடொன்றினன்வியப்பிதம்மா... .... *
வித்தனியுடலைப்பார்த்தாலிதயத்தினறிவின்வித்தாஞ் ......*
சத்துவசேடமுண்டேற்றலைவனைப்புணர்வமெல்லென் .....*
றத்தியால்வாழ்துமன்றேலங்ஙனைவடிவம்விட்டு ........*

(இ-ள்) உத்தமன்- உத்தமனானவரசன் — தற்பதத்தோடொன்றினன்-பிரமபதத்திற்கலந்தான் — வியப்பிதம்மா - ஈததிசயம் — இத்தனியுடலை -இந்தத்தனிமையானசரீரத்தை — பார்த்தால்-நோக்கினால் — இதயத்தின்-இருதயத்தில் — அறிவின்வித்தாம் - அறிவுக்குவிதையாகிய — சத்துவசேடமுண்டேல்- சத்துவசே

டயிருக்குமாயின்—தலைவனைப்புணர்வம் - நாயகனைச்சேர்ந்து—மெலமெலென்று-மிருதுவாக—அத்தியால்வாழ்தும்-திரமாகவாழ்வோம்—அன்றேல்- (சத்துவசேட)மில்லாவிடின்—அங்ஙனை வடிவம்விட்டு-நமதுபெண்ணுருவத்தைவிட்டு—(எ-று)(௱௬௯)

(இதுவுமது)

மறுபவமுறாதவண்ணமாசறுபதத்தைச்சேர்து. ....... *
மறுதீபிமெதன்னவுன்னிப்பரிசத்தால்விழியாலன்று ....... *
றுமறிவுக்குவித்தாயுற்றசத்துவசேடந்தா ........... *
னிறுதியற்றிதயந்தன்னிலிருந்தது கண்டாளென்ன ........ *

(இ-ள்) மறுபவம்-மறுபிறப்பை—உறாதவண்ணம்- அடையாதபடி—மாசறு-குற்றமற்ற—பதத்தைச்சேர்தும்- பிரமபதத்தையடைவோம்—அறுதியீமெதன்னவுன்னி-நிச்சயமிதுவென்றுசிந்தித்து—பரிசத்தால்-பரிசத்தினாலும்—விழியால்-கண்ணினாலும்— அன்றன்-அவ்வரசன்— உறுமறிவுக்கு-பொருந்தியவறிவுக்கு—வித்தாயுற்ற-விதையாகப்பொருந்திய—சத்துவசேடந்தான்-சத்துவசேடமானது—இறுதியற்று - கேடிதவில்லாமல்—இதயந்தன்னில்- இருதயத்தில்—இருந்தது கண்டாளென்ன- இருந்ததைப் பார்த்தாளென்றுவசிட்டமுனி சொல்ல—(எ-று) [இ-௫-௧-ம்] இச்சமாதிஜீவன்முத்தமாவிதேகமுத்தமாமென்றறையுற்றான்றிப்பார்க்கின்ஜீவன்முத்தித்தன்மையினிலக்கணத்தைக் கண்டனமென்பதாம். (௱எ௰)

{ மனமிறந்தவ்வரூபசமாதியிற்சத்துவசேடமெங்ஙனமிருக்குமெனல். }

கேட்டலுமிராமன்சொல்வான்கிளர்மனந்தீரமாய்ந்து ...... *
காட்டலோட்டம்போற்சுத்தக்கண்ணிலேகலந்துளோருக்.. ...*
கீட்டுசத்துவசேடந்தானெங்ஙனேமுளைக்குமென்ன..... .. *
வாட்டமின்ஞானமிக்கவசிட்டமாமுனிவன்சொல்வான்.. ... *

(இ-ள்) கேட்டலும் - (இதைக் கேட்கவும்—இராமன்சொல்வான்-ஸ்ரீராமன்சொல்லுவார்—கிளர்-சொல்லப்பட்ட—மனந்தீரமாய்ந்து-மனதுமுழுதுங்கெட்டு—காட்டலோட்டம்போல்-கட்டையுங்கல்லையும்போல—சுத்தக்கண்ணில் - பரிசுத்தஞானமான திருஷ்டியில்—கலந்துளோர்க்கு-கலந்தவர்களுக்கு—ஈட்டுசத்துவசேடந்தான் - இவ்விடத்திற்சத்துவசேடமானது—எங்ஙனேமுளைக்குமென்ன- எப்படியுண்டாமென்றுகேட்க—வாட்ட

யில்-தளர்வில்லாத—ஞானமிக்க-அறிவின்மிகுந்த—வசிட்டமா
முனிவன்-வசிட்டமாமுனியானவர்—சொல்வான்-சொல்லுவார்
—(எ-று) (௱௭௧)

(தேகநிமித்தஞ்சத்துவசேடமிருக்குமெனல்)

வித்தினுட்பூவுங்காயுமேவல்போலிதயந்தன்னிற் .......... *
சித்தின்காரணமதானசத்துவசேடநிற்கு .............. *
முத்தனும்மனமிறந்தான்மொய்யுடல்போகாபோகத் ...... *
தொத்தவின்பத்துன்பங்கள்சார்தலற்றொருமைத்தாகும் ... *

(இ-ள்) வித்தினுள்-விதைக்குள்—பூவும்-புட்பமும்—காயும்-
பழங்களும்—மேவல்போல்-பொருந்தியிருப்பதுபோல—இத
யந்தன்னில்-இருதயத்தில்—சித்தின்காரணமதாம்-அறிவுக்குகா
ரணமாகிய—சத்துவசேடநிற்கும்-சத்துவசேடமிருக்கும்—மு
த்தனும்மனமிறந்தால்-சீவன்முத்தனும்மனோநாசமானால்—
மொய்யுடல்போகா-வலிமையுள்ளசரீரநசியாது—போகத்தொ
த்த-போகங்களிற்பொருந்திய-இன்பத்துன்பங்கள்-சுகதுக்கங்க
ள்—சார்தலற்று-கிட்டாமல்—ஒருமைத்தாகும்-ஒற்றுமையாகு
ம்—(எ-று) [இ-உ-க-ம்] சத்துவசேடமிருக்குந்தன்மையைவிளு
வினதற்குத் தரங்கூறினதாம்சத்துவசேடமென்பது அறிவுக்கு
வித்தாகியசத்திலவ்வறிவுசீவன்முத்திபரியந்தங்களாயாமலடங்கி
நுண்ணிதாய்மிஞ்சியிருந்ததெனக்கொள்க (௱௭௨)

{சித்தாய்ச்சென்று சத்திலடங்கி யிருந்தசித்தை
வெளிப்படுத்தல்}

ஆதலாலிராமனேயவ்வணங்களுளந்தமெய்விட் ........... *
டேதமிலாதியந்தமின்றியவறிவினுட்போய் ............. *
மேதகுசத்துவஞ்சேர்வேந்தனெஞ்சசையப்பண்ணி ......... *
தீதிறனுடலின்மீளச்சேர்ந்தனள்கூடார்புட்போல் ......... *

(இ-ள்) ஆதலால்-ஆதலினால்—இராமனே-ஸ்ரீராமா—அவ்வ
ணங்களுள்-அத்தெய்வகன்னிக்கொப்பானசூடாலையானவள்—
அந்தமெய்விட்டு-அக்கும்பவடிவத்தைவிட்டு, ஏதமில-குற்றமற்
றதாய்—ஆதியந்தமின்றிய-ஆதிமத்யாந்தரகிதமான—அறி
வினுட்போய்-சித்தினுள்ளேபுகுந்து—மேதகு-மேன்மைபொ
ருந்திய—சத்துவஞ்சேர்-சத்துவசேடமடைந்திருக்கின்ற—வே
ந்தனெஞ்சு-அரசனதுமனதை—அசையப்பண்ணி-சலிக்கச்செ
ய்து—தீதிறனுடலில்-குற்றமற்றதனதுசரீரத்தில்—கூடார்பு

ட்போல்- கூண்டிலடைகின்றபட்சியைப்போல—மீளச்சேர்ந்தனள்-திரும்பவந்தடைந்தனள்—(எ-று) (௱௭௩)

(சத்தினின்றுஞ்சித்துவிகசித்தல்)

கும்பன்மெய்யாகிப்பூமேலிருந்தனள்குழல்போற்பாடத் ... *
தம்பமாயிருந்தோன்மெய்யிற்சத்துவகுணஞ்சார்போதந் ... *
தும்பினோர்பாட்டைக்கேட்டுப்பையப்பையசூரியன்சே ... *
ரம்புயம்போல்விரிந்தவன்மனநிலையாயிற்றே ... *

(இ-ள்) கும்பன்மெய்யாகி - கும்பமுனிவடிவமாய்—பூமேலிருந்தனள்- பூமியிற்றனதாசனத்திலிருந்தவளாய்—குழல்போற்பாட - பிள்ளாங்குழலைப்போல—(சாம)கானஞ்செய்துகொண்டிருக்க -தம்பமாயிருந்தோன்—கட்டையைப்போலிருந்தவரசன்-மெய்யில்-சரீரத்தில்—சத்துவகுணஞ்சார்போதம் - சாத்துவிககுணத்தையடைந்திருக்கின்றஞானமானது—தும்பினோர்-வண்டுக்கொப்பாக—பாட்டைக்கேட்டு- பாடுகின்ற)சாமகானத்தைக்கேட்டு—பையப்பைய-மெல்லமெல்ல—சூரியன்சேர்-ஆதித்தகிரணத்தைச்சார்ந்த—அம்புயம்போல்- தாமரைமலரைப்போல—விரிந்து-விகசிதமாய்—அவன்மனநிலையாயிற்று - அவனுடையமனதுநிலையாயினது—(எ-று) (௱௭௪)

{ஆனந்தத்தோடுமாசிரியனைத்தரிசித்துவணங்கித்துதித்தல்.}

கண்டனன்கும்பன்றன்னைக்களிப்புறுமனத்தனாகித் ... *
தண்டலிலருளாலென்னைவாழ்விப்பான்றானேவந்தான் ... *
பண்டையக்குரவனென்றுபரவிநன்மலர்தூயேத்த ... *
மண்டலமேவந்தன்றன்னைமற்றவனோக்கிச்சொல்வான் ... *

(இ-ள்) கும்பன்றன்னை - கும்பமுனியை—கண்டனன் - பார்த்தனன்—களிப்புறுமனத்தனாகி - இன்பமிகுந்தமனதையுடையவனாய்—தண்டலில்-தடையற்ற—அருளால்- கிருபையினால்—என்னைவாழ்விப்பான் - என்னைச்சுகிக்கச்செய்யப்பொருட்டு—பண்டையக்குரவன்-முன்பெழுந்தருளியகுருநாதன்—தானேவந்தானென்று-சுயமாகவேவந்தானென்று—நன்மலர்தூய்- நல்லபட்பங்களைச்சொரிந்து—பரவியேத்த -வணங்கித்துதிசெய்ய—மண்டலமேவந்தன்றன்னை-பூமிக்கரசனை—மற்றவனோக்கி- பின்புந்தக்கும்பமுனியானவர்பார்த்து—சொல்வான் - சொல்லுவார்—(எ-று) [இ-ஃ-க-ம்]சமாதியிலிரதிசயானந்தமாய்க்களைத்தவிவ்

வனுபவத்தோடும்வெளிப்பட்டாசிரியனாயந்தவடிவமாகத் தரிசித்ததாம். (௱எ௫)

(சீடன்சமாதிசுகத்தைக்கண்டுசந்தோஷித்தல்)

இங்குனின்றகன்றநாடொட்டின்றளவுன்பாற்சித்தம் ......... *
பங்கறநின்றதண்டர்பதியுநின்கூட்டம்போல- ............ *
வங்கிதமல்லவென்னவண்ணலேவாழ்ந்தேனின்னூற் ........ *
றுங்கமாயுற்றவின்பசமாதியிற்றுயரந்தீர்ந்தேன் ........... *

(இ-ள்) இங்குனின்று-இவ்விடத்திலிருந்து—அகன்றநாடொட்டு-நீங்கினநாடுடங்கி—இன்றளவு- இன்றையவரைக்கும்—உன்பாற்சித்தம்- உன்னிடத்திலென்னமனமானது—பங்கறநின்றது பிரிவற்றிருந்தது—அண்டர்பதியும்- தெய்வலோகமும்—நின்கூட்டம்போல- உனதுசங்கத்தைப்போல—அங்கிதமல்லவென்ன- இன்பமல்லவென்றுகும்பமுனிசொல்ல—அண்ணலே-பெருமையிற்சிறந்ததெய்வமே—நின்னூல்வாழ்ந்தேன்- உம்மாற்சுகத்தையடைந்தேன்—துங்கமாய்- பரிசுத்தமாகி—உற்றவின்பசமாதியில்-பொருந்தியசுகசமாதியில் — துயரந்தீர்த்தேன்-துன்பமற்றேன்—(எ-று) (௱எசு)

{ஆசிரியரவ்வனுபவவிலாசத்தைநான்குவிதமாகப்பகுத்துவினவுதல்.}

நிருவிகற்பத்தினின்பநிறைந்தபொன்னூட்டுமில்லை ......... *
யொருமையுற்றதனைமேவியும்பரிலிம்பர்தன்னிற் ........ *
றிரிவனென்றரசன்சொல்லக்கும்பனுஞ்செப்புகிற்பா ........ *
னரியவானந்தவாழ்விலயர்வெலாமறவாழ்ந்தாயோ ........... *

(இ-ள்) நிருவிகற்பத்தில்- நிருவிகற்பசமாதியிலுள்ள—இன்பம்-ஆனந்தமானது—நிறைந்த - (புண்ணிய) நிறைந்த—பொன்னூட்டுமில்லை-சுவர்க்கத்திலுமில்லை—ஒருமையுற்று-தனிமையாகி—அதனைமேவி-அவ்வாநந்தத்தையடைந்து—உம்பரில்-தெய்வலோகத்திலும்—இம்பர்தன்னில்-பூலோகத்திலும்—திரிவனென்று- உலாவுவனென்று—அரசன்சொல்ல- வேந்தன்சொல்ல—கும்பனுஞ்செப்புகிற்பான்-கும்பமுனியுஞ்சொல்லுவார் —அரியவாநந்தவாழ்வில்-அரிதானபிரமாநந்தவாழ்வில்— அயர்வெலாமற-வருத்தங்களனைத்துநீங்க—வாழ்ந்தாயோ-சுகித்தாயோ. (எ-று) (௱எஎ)

(இதுவுமது)

பேதமேவடிவமானதுன்பங்கள்பேறுத்தாயோ ............ *

போதல்போதினிதாஞ்சங்கற்பத்திலிற்பூண்டவின்பந் .......*
தீதெனவேரறுஞ்செற்றுசமதரிசனமுற்றாயோ..... ... .... *
யாதினும்வீடுபற்றற்றியைந்தசெய்தின்புற்றாயோ ....... *

(இ-ள்) பேதமேவடிவமான-வேற்றுமையேயுருவமாயிருக்கின்ற — துன்பங்கள்-துயரங்களை — பேதித்தாயோ - கெடுத்தாயோ — போதல்போது வரும்பொழுது — இனிதாம் - இனிமையாகிய — சங்கற்பத்திலில்-சங்கற்பத்தில் — பூண்டவின்பம்-கொண்டசுகத்தை — தீதென-குற்றமென்று — வேரறுஞ்செற்று மூலத்துடன்கெடுத்து — சமதரிசனம்.சமதிருஷ்டியை — உற்றாயோ-அடைந்தாயோ — யாதினும்-எதிலும் — வீடுபற்றற்று- விடுதலும்பற்றுதலுநீக்கி — இயைந்தசெய்து-நேர்ந்தகாரியங்களைச்செய்து — இன்புற்றாயோ- சுகமடைந்தாயோ.—(எ-று) [இ-ரு-கசு-ம்] சுட்டறப்பெற்ற சுகானுபவத்தைச் சுட்டிற்பரிசிக்கப் பகுத்துவினாவினதாம். (ருள அ)

(அனுபவவிலாசத்தைச்சொல்லுதல்)

என்னுநின்னருளாற்பங்கித்தெறப்பெத்தாலெலாம்விட்டப்பான் *
மனநிலைநின்றேன்மாயைக்களைகண்டேன்வருபேறெல்லாம்.. *
கனமுறப்பெற்றேன்கேட்கக்காணவேண்டுவதொன்றில்லை .. *
யனவரதமுநிறைந்தேனயர்வற்றேன்பிறவியற்றேன் ......*

(இ-ள்) என்றலும்-(இப்படி)யென்று (கும்பமுனிகேட்கவும்) — நின்னருளால்-உமதுகிருபையினாலும் — பங்கித்தெறப்பெத்தால்-என்பங்கிலுள்ள தேவாதீனத்தினாலும் — எலாம்விட்டப்பால்-நிரிவயபடினைத்து நீங்கினவதீதத்தில் — மனநிலைநின்றேன் - மனநிலையாயிருந்த — மாயை-சம்சாரத்தினது — களைகண்டேன்-முடிவைப்பார்த்தேன் — வருபேறெல்லாம்-வரப்பட்ட விலாபங்களனைத்தையும் — கனமுறப்பெற்றேன் - திடமாகவடைந்தேன் — கேட்கக்காண-கேட்பதற்கும் பார்ப்பதற்கும் — வேண்டுவதொன்றில்லை-விரும்புவதொன்றுமில்லை — அனவரதமும் - எப்பொழுதும் — நிறைந்தேன்-பூரணமானேன் — அயர்வற்றேன்-துன்பநீங்கினேன் — பிறவியற்றேன் - பவநீங்கினேன்.—(எ-று)

(இதுவுமது)

பயமற்றேன்மோகமற்றேன்பற்றற்றேன்சமமாய்நின்றே .. *
துயர்வற்றேனெல்லாமானேனொருசெயலற்றேன்விண்ணு .. *
ளியலொத்ததெளிவாய்ச்சாந்தமெய்தினேனென்றான்மோகச் *
செயன்முற்றுங்கடந்தசிந்தைச்சிகித்துவசப்பேரியன்னன் .. *

(இ-ள்) பயமற்றேன்-அச்சநீங்கினேன்—மோகமற்றேன்-மயக்கநீங்கினேன்—பற்றற்றேன்-ஆசைநீங்கினேன்—சமமாய்நின்றேன்-சமமாயிருந்தேன்—உயர்வுற்றேன்-மேன்மையடைந்தேன்—எல்லாமானேன்-சகலரூபமானேன்—ஒருசெயலற்றேன்-ஒருதொழிலுமில்லாதவனானேன்—விண்ணனையபொலிந்த- ஆகாயத்தின்றன்மையையொத்த—தெளிவாய்-தெளிவையுடையவனாய்—சாந்தமெய்தினேன்-உபசாந்தத்தையடைந்தேன்—யோகச்செயன்முற்றும்-மயக்கத்தினுந்தொழிலெல்லாம்— கடந்த சிந்தை-தாண்டின மனத்தையுடைய—சிகித்துவசப்பேர்- சிகித்துவசனென்னு நாமத்தையுடைய—மன்னனென்றான்- அரசன் சொன்னான்.—(எ-று) [இ-உ-க-ம்] நீங்கவேண்டினவையெல்லாநீங்கியடையவேண்டினவைப்யாவு மடைந்ததைப் பஞ்சனைத்துவிதமாகப் பகுத்துச்சொல்லியதாம். (௱௮௰)

{சகச திருஷ்டியினாற் சாக்ஷாத்கார வனுபவ முண்டாகும் பொருட் டாசிரியருஞ் சீடனு மொன்றாகச் சஞ்சரித்தல்.}

அவ்வகையிரண்டுபேருமாற்றுமதத்துவத்தின்........ ... .. *
செவ்வியவிசாரத்தானுந்தெளிதருமொழிகளாலுந்... .. ...*
தவ்வறுநேயமிக்கோர்தம்மிற்றமுணர்தலுற்று .. ... .. *
வெவ்வனமோடைகுன்றுவேறறவெங்கும்வாழ்ந்தார்......... *

(இ-ள்) அவ்வகை-அப்படியே—இரண்டுபேரும்-இருவரும்—ஆற்றுமதத்துவத்தின் - ஆன்மதத்துவத்தினது — செவ்வியவிசாரத்தானும்-அழகானவிசாரணையினாலும்— தெளிதருமொழிகளாலும்-தெளிவின்றவசனங்களினாலும்— தவ்வறுநேயமிக்கோர்- அழிவில்லாதவன்பின்மிகுந்தவர்கள்—தம்மிற்றம்- தங்களிற்றாங்கள்—உணர்தலுற்று-அறிந்துகொண்டு—வெவ்வனம்- விருப்பத்தையுடைய கானகங்களிலும்—ஓடை- தடாகங்களிலும்—குன்று-மலைகளிலும்—வேறறவெங்கும்வாழ்ந்தார்- வேற்றுமையின்றி யெவ்விடத்திலுஞ்சுகித்தார்கள்.—(எ-று) (௱௮௧)

(தாங்கள்கொண்டகோலமேகோலமாகச்சஞ்சரித்தல்)

இயலறிவன்புசெய்கையிணையற்றோர்பற்றும்வீடு ....... *
மயலறவிட்டுத்தென்றற்கசைவுறவடகுன்றொப்பார் ....... *
பயிலுடலொருகாற்றூளிபடர்விப்பாரொருகாலீறு ....... *
வியலுறவணிவோர்காற்சந்தனவிரையேசேர்வார்......... *

(இ-ள்) இயலறிவு-சுபாவமான ஞானத்திலும்—அன்புசெய்

கை-அன்புள்ளதொழில்களிலும்—இணையற்றோர்-ஒப்பில்லாதவர்கள்—பற்றும்-இராகமும்—வீம்ம்-துவேடமுமாகிய—மயலறவிட்டு-மயக்கத்தை யொருங்கேயொழித்து—தென்றற்கு-தென்றற்காற்றுக்கு—அசைவுறுவடகுன்றொப்பார்-சலியாதமகம்மேருவுக்கொப்பானவர்கள்—பயிலுடல்-சொல்லப்பட்டசரீரத்தில்—ஒருகால்-ஒருபொழுது—தூளியடர்விப்பார்-புழுதியைப்படரச்செய்வார்கள்—ஒருகால்-ஒருபொழுது—நீறுவியனுறவணிவர்-விபூதியைப்பெருமையாகத்தரிப்பார்கள்—ஓர்கால்-ஒருபொழுது—விரை-வாசனையுள்ள—சந்தனம்-சந்தனத்தை—சேர்வார்-தரிப்பார்கள்.—(எ-று) [இ-உ-க-ம்] இராகத்துவேடமின்றி யேதேதெப்படியோ வதுவதப்படியாய் விளங்கினானெனவறிந்ததாம். (௱௮௨)

முன்புஞானமும்போகமும்வீடு மின்றளிப்பேனென்றபடி ஸ்வரூபஞானத்தைக் கொடுத்துப் போகங் கொடுப்பதற்கதின்பற்றுநீக்கம் பரிசோதிக்கச் சிந்தித்தல்.

சிறிதுநாளுடனேவாழ்ந்துதேமொழிவேந்தைநோக்கி .... *
பிரிவுறுகணவன்சாலவுதாரமாய்ப்பீடையற்றான்... .. .......*
செறியெழில்விடலையாகுஞ்செல்வம்பூமனையுமெல்லாம்... ...*
வறியபோலவமாய்ப்போமால்வாழுநரிலாமையாலே..... ...*

(இ-ள்) சிறிதுநாள்-கொஞ்சகாலம்—உடனேவாழ்ந்து-கூடவேவாழ்ந்திருந்து—தேமொழி-மதுரவசனத்தையுடையசூடாலையானவள்—வேந்தைநோக்கி-அரசனை(மனதிற்)பார்த்து—பிரிவுறுகணவன்-தன்னைப்பிரிந்திருக்கின்ற தலைவனான சிகித்துவசன்—சாலவுதாரமாய்-அனுபூதியின் மிகவு முறுதியுள்ளவனாய்—பீடையற்றான்-துன்பநீங்கினான்—செறியெழில்-மிகுந்தவழகையுடைய—விடலையாகும்-இளமையாகிய—செல்வம்-சம்பத்தும்—பூமனையும்-புட்பங்களிறைந்த வரண்மனையுமாகிய—எல்லாம் சகலமும்—வறியபோல்-இல்லாமையைப்போல—வாழுநரிலாமையால்-சுகிக்கின்றவர்களில்லாமையினால்—அவமாய்ப்போம்-வீணாய்ப்போகும்.—(எ-று) (௱௮௩)

(ஸ்த்ரீயிச்சையைப்பரிசோதிக்கச்சிந்தித்தல்)

இழிவறுஞானம்பெற்றோரியல்புறத்தானேவந்த ... ... ....*
தொழிவுறவிடுவொன்றினுண்மையையுணர்ந்ததென்றும் .... *
வழிபடுமன்னனம்பான்மணஞ்செயற்காணதொன்றை...... *
பழிவறுமதியினாலிங்கமைத்துமென்றுளத்திலெண்ணி.. .....*

(இ-ள்) இழிவறு ஞானம்பெற்றோர்-பூரணஞானத்தையடைந்தவர்கள்—இயல்புற-சுபாவமாக—தானேவந்தது-வலியவந்ததை—ஒழிவுற-தவிரும்படியாக—விடுவரெனில்-விடுவார்களானால்—உண்மையை-தத்துவத்தை—உணர்ந்ததென்-அறிந்ததென்ன—வழிபடுமன்னன்-சன்மார்க்கமுள்ளஅரசன்—நம்பால-நம்மிடத்தில்—மணஞ்செயற்கு-கல்யாணஞ்செய்வதற்கு—ஆனதொன்றை உண்டாகியவொருயத்தியை—அழிவறுமதியினால-அழிவற்றவுணர்வினால்—இங்கமைத்துமென்று இவ்விடத்திலுண்டாக்குவோமென்று—உளத்திலெண்ணி-மனதினினைத்து—(எ-று)

(திருவிழாவைக்குறித்துச்செல்லவேண்டுமெனல்)

தலைவனைநோக்கிச்சொல்வாள்சதமகனுலகினின்றோர் ......... ❋
நிலைபெறவிழாவுண்டாங்கேநேருநாரதரோடியானு ... ... ❋
முலைவறநிற்றல்வேண்டுமுயர்விதிவலியார்வெல்வர் ........ ❋
மலைமிசையிரவிபோங்கால்வருவனிவ்விளைவிலிங்கே ...... ❋

(இ-ள்) தலைவனைநோக்கி-நாயகனைப்பார்த்து—சொல்வாள்-(கும்பமுனியானை)குடாலைசொல்லுவான்—சதமகனுலகின்-தேவலோகத்தில்—இன்று-இன்றையத்தினம்—நிலைபெற-ஒருநிலைபெறும்படிசெய்யும்—விழவுண்டு-திருவிழாவுண்டு—ஆங்கு-அவ்விடத்தில்—நேருநாரதரோடு-பொருந்தியநாரதருடன்—யானும்-நானும்—உலைவறநிற்றல்வேண்டும்-அசைவறவிருக்கவேண்டும்—உயர்விதிவலி-மேலானநியதியின்பலத்தை—யார்வெல்வர்-யாவர்செயிப்பார்கள்—மலைமிசை-அஸ்தமனபர்வதத்தின்மேல்—இரவிபோங்கால்-சூரியன்போகின்றசமயத்தில்—இவ்விளைவில்-இதோசீக்கிரமாக—இங்குவருவன்-இவ்விடத்தில்வருவேன்—(எ-று) (௱௮௫)

(சகச்சமாதியிலிருத்திச்செல்லுதல்)

நீங்கருமுணர்வினோடுநீயிவணிருத்தியென்றோர் ........... ❋
தேங்கமழ்மலரின்கொத்தைச்சிகித்துவசனுக்குநல்கி.......... ❋
யோங்கினள்விசும்பிலேகி வன்விழியுறுதமட்டிற் .......... ❋
றூங்கியகும்பன்மேனிதவிர்ந்துதன்வடிவமானாள். ........ ❋

(இ-ள்) நீங்கருமுணர்வினோடு-நீங்குதற்கரியவறிவுடன்—நீயிவணிருத்தியென்று-நீஇவ்விடத்திலிருப்பாயென்று—ஓர்-ஒரு—தேங்கமழ்மலரின்கொத்தை - வாசனைபரிமளிக்கும்புட்பக்கொத்தை—சிகித்துவசனுக்குநல்கி-சிகித்துவராசனுக்குக்கொ

த்து—விசும்பிலோங்கினள்-ஆகாயத்திலெழும்பினள்—அவன் விழிபுறுதமட்டிலேகி- அவன்கண்ணுக்குத்தெரியாதவரைக்கும் போய்—தங்கியகும்பன்- சுமந்தகும்பனென்கின்ற—மேனிநீ யிர்ந்து-சரீரத்தைவிட்டு—தன்வடிவமானாள்- தனதுசூடாலைவடிவமுள்ளவளானாள்—(எ-று) (௱அ௬)

(அரசாட்சிசெய்துவருதல்)

இந்திரனிருக்கையேய்ந்தவில்லம்புக்கறியாவண்ண............*
மந்திரநெறியின்மன்னன்காரியமரபிற்செய்து ...........*
சந்திரவதனிமீண்டுங்கும்பனாய்த்தலைவன்றன்பால்... ..........*
வந்திழிவுற்றுசாலவாடியமுகத்தள்போலாய்..................*

(இ-ள்) இந்திரன்-தேவேந்திரனுனவன்—இருக்கையேய்ந்த-இருக்கின்றதெய்வலோகத்துக்கொப்பாகிய—இல்லம்புக்கு-அரண்மனையிற்புகுந்து—அறியாவண்ணம் - யாவருமறியாதபடி—மந்தரநெறியில்-அரசநீதியில்—மன்னன்காரியம்-இராசகாரியங்களை—மரபிற்செய்து-முறைமையாகச்செய்து—சந்திரவதனி- சந்திரனைப்போலகுளிர்ந்தமுகத்தையுடையசூடாலையானவள்—மீண்டும்-திரும்பவும்—கும்பனாய்-கும்பமுனிவடிவமாகி—தலைவன்றன்பால்-நாயகனிடத்தில்—வந்திழிவுற்று-வந்திறங்கி—சாலவாடிய-மிகவுஞ்சுருங்கின—முகத்தள்போலாய்- முகத்தையுடையவளைப்போலாகி—(எ-று) (௱அ௭)

(ஓர்பாசாங்குரைக்கமுகம்வாடிநிற்றல்)

பனிபடர்மதியமென்னப்பங்கயமென்னச்சோம்பி.........*
தனிமுகம்வாடிச்சிந்தையயர்விலாளணுகலோடும்...........*
புனிதநாயகனுநோக்கிப்பொருக்கெனவருந்தியெந்தாய். ....*
துனியுறுகின்றார்போன்றாய்துயரெனத்துரைத்தியென்றே..*

(இ-ள்) பனிபடர்-பனிமூடிய—மதியமென்ன- சந்திரனைப்போலவும்—பங்கயமென்ன-தாமரைமலரைப்போலவும்— சோம்பி-சோம்பலாய்—தனிமுகம்வாடி- மிகவும்வதனஞ்சுருங்கி—சிந்தையயர்விலாள்-மனதிற்றுன்பமற்ற கும்பமுனியான சூடாலையானவள்—நணுகலோடும்-சேர்ந்தவளவில் — புனிதநாயகனும்-பரிசுத்தமுள்ள கணவனுன சிகித்துவசனும்—நோக்கி-(கும்பமுனியைப்)பார்த்து—பொருக்கென-சீக்கிரமாகவெழுந்து—வருந்தி-ப்ரார்த்தனைசெய்து—எந்தாய் - எனதுபிதாவே—துனியுறுகின்றார்போன்றாய்- துன்பமடைந்தவர்களைப்போல

காணப்படுகின்றாய்— துய்யொன - துன்பமென்ன— துடைத்தியென்று-கெடுப்பாயென்று.— எ-று) (௲அஅ)

(அரசன்றேற்றுதல்)

தத்துவஞானமுற்றோர்தளர்வுறார்மகிழார்கஞ்சப் *
பத்திரம்பயின்றநீரின்பற்றுமோவென்றலோடும் *
குத்திரமேனிக்கும்பன்விளம்புறுகுழலின்பண்போற் *
சித்திரமாகவொன்றைச்சிகித்துவசனுக்குச்செப்பும். *

(இ-ள்) தத்துவஞானமுற்றோர்- உண்மைஞானமடைந்தவர்கள்— தளர்வுறார்-தளரார்கள்— மகிழார்- சந்தோஷியார்கள்— கஞ்சப்பத்திரம்-தாமரையிலையானது— பயின்றநீரின் - கூடியிருந்தசலத்தில்— பற்றுமோ-பொருந்துமோ— என்றலோடும்- என்றரசன்சொல்லவும்— குத்திரமேனிக்கும்பன்- வஞ்சகவடிவத்தையுடைய கும்பமுனி— விளம்புறு-சொல்லப்பட்ட — குழலின்பண்போல்-வேய்க்குழலினோசையைப்போல— சித்திரமாக-அதிசயமாக— ஒன்றை-ஒருசரித்திரத்தை— சிகித்துவசனுக்குச்செப்பும் சிகித்துவவரசனுக்குச்சொல்லுவான்.—(எ-று) [இ-ள் க-ம்] மாபோகத்தைக் கொடுக்குநிமித்தம் பரிசோதிக்கத் தொடங்கினதாம். (௲அகூ)

{பிராரத்தகன்மசேட மனுபவித்து நீங்கவேண்டுமெ ன்பதை யுறுதிப்படுத்துநிமித்த நீங்காததேக கன்ம த்தை நீக்கும்படி நினைத்து வருந்துவார்க ளெனல்.}

உடலுள்ளளவுங்கன்மேந்திரியத்துடனுறல்செய்யாரேற் *
றிடமுறசமசித்தத்தேசெறிபவரறிஞரல்லார் *
சடர்களேயாவர்தானேசார்வுறுமவத்தையென்று *
விடநினைத்தறிவிலாதார்வீணிலேமெலிந்துளைவர். *

(இ-ள்) திடமுறசமசித்தத்து-திரமாகச் சமத்துவமனதில்— செறிபவர்-சேர்ந்தவர்கள்— உடலுள்ளளவும்- தேகமிருக்குமட்டும்— கன்மேந்திரியத்துடன்-கன்மேந்திரியங்களோடும்— உறல்செய்யாரேல்-பொருந்தார்களாயின்— அறிஞரல்லார்-ஞானிகளல்ல— சடர்களேயாவர்- வஞ்சகராவார்கள்— தானே - சுயமாகவே— சார்வுறுமவத்தை-வந்தடைகின்ற வவஸ்தையை— வென்றுவிடநினைத்து- செயஞ்செய்யும்படிகருதி— அறிவிலாதார்வீணிலேமெலிந்துளைவர்- ஞானமில்லாதவர்கள் விருதாவாகவிளைத்துவருந்துவார்கள்.—(எ-று) (௲கூ௰)

(தேகமுள்ளமட்டுமவத்தைநீங்காதெனல்)

நிலமுளவளவும்போகாத்தயிலம்போற்றேசமட்டும் *
பலபலவவத்தைநீங்காப்பற்றறவிவற்றைத்தீர்ப்போ *
ரலகிலாவிண்ணைவாளாலறுப்பவொக்குமன்னே *
மலவுடலவத்தைநீக்கிலதற்கொக்கும்வாழ்வுண்டாமோ. *

(இ-ள்) நிலமுளவளவும்-உள்ளளவுமட்டும்—போகாத்தயில மபோல் நீங்காதவெண்ணெயைப்போல—தேகமட்டும் - சரீர மிருக்குமளவும்— பலபலவவத்தைநீக்கா - நாநாவிதமான வவத் தைகணீங்கமாட்டாது—பற்றற பற்றுதலில்லாமல்— இவற்றை த்தீர்ப்போர்-இவ்வவத்தையைக்கெடுப்பவர்கள் — அலகிலாவி ண்ணை-அளவிடக்கூடாத வாகாயத்தை—மன்னா-அரசனே—வா ளால்-கத்தியினால்—அறுப்பவொக்கும்- அறுப்பவர்களுக்கொ ப்பாகும்—மலவுடலவத்தை-மலசரீரத்துக்குள்ள பருவதுன்பத் தை— நீங்கில்-(கன்மேந்திரியநிக்கிரகத்தானீங்கில் — அதற்கு- அந்த(ஞானத்தாற்செய்யுந்தேகதுக்கபரித்தியாகமான)வதற்கு —ஒக்கும்வாழ்வுண்டாமோ - இணையானசுகமுண்டாகுமோ.— (எ-று) (௱௯௧)

(கன்மநீங்காதென்னும்விதியைச்சொல்லுதல்)

ஒருபால் ஞானேந்தியத்துடனுமொருபால் கன்மேந்தியத்துட னும், வருமாறுளதாமுடலுக்குமலரோன் முதலாமெல்லோருந் தெருள்பான்மையராயினுந்தேகவவத்தை தீராதென்றுணர்கை யருகாதின்றுவழுவாமலறுதியானவிதிநெறியே.......... *

(இ-ள்)உடலுக்கு-தேகத்துக்கு—ஒருபால்-ஒருபக்கத்தில்— ஞானேந்தியத்துடனும் ஞானேந்திரியத்தோடும் —ஒருபால்- ஒருபக்கத்தில் —கன்மேந்தியத்துடனும்-கன்மேந்திரியத்தோடு ம்— வருமாறுளதாம்-வருகின்றவிதமுண்டாயிருக்கின்ற — மல ரோன்முதலாம்-பிரமன்முதலாகிய—எல்லோரும் -யாவரும்— தெருள்பான்மையராயினும்-தெளிவுள்ளகுணத்தையுடையவரா யினும்—தேகவவத்தை-சரீரவவத்தையானது — தீராதென்று ணர்கை-நீங்காதென்றறிதல்—அருகாநின்றுவழுவாத- நசித்து நீங்காத—அறுதியான-நிச்சயமாகிய—விதிநெறியே- நியதிமா ர்க்கமாம்.—(எ-று) (௱௯௨)

(அறிஞர்விதிமார்க்கத்தையனுசரிப்பார்களெனல்)

கற்றவறிஞரறிவில்லோரெல்லாங்காணப்படுபொருளா *

யற்றபடியால்விதிவசத்தேயுறுவர்கடலினுறுநீர்போ *
னித்தமறிஞர்சமபுந்திநிலையாற்கைகாலசைதலினாற் *
பெற்றவுடலம்விடுமளவும்பெயராவிதியைப்பின்செல்வர். *

(இ-ள்) கற்றவறிஞர்-கற்றுணர்ந்தஞானவான்களும்— அறிவில்லோர்-அஞ்ஞானிகளும்— எல்லாங்காணப்படுபொருளாய்-யாவுந்திரிஸ்யவஸ்துக்களாய்—உற்றபடியால்- பொருந்தியதால்—கடலினுறுநீர்போல்-சமுத்திரத்திலுள்ள சலத்தைப்போல—விதிவசத்தேயுறுவர்-நியதியின்வசத்திற்செல்லுவார்கள்— நித்தம்-நாடோறும்—அறிஞர்-ஞானவான்கள்— சமபுந்திநிலையால்-சமமானவிநிச்சயத்தினால்—கைகாலசைதலினால்- கரசரணங்கள்சரிக்க—பெற்றவுடலம்-பெற்றிருக்கின்ற சரீரமானது—விடுமளவும் நீங்கும்பரியந்தம்—பெயராவிதியை- நீங்காதநியதியை—பின்செல்வர்-அனுசரிப்பார்கள்.—(எ-று) (௱௬௩)

(தனக்குவந்தகன்மத்தைச்சொல்லத்தொடங்கல்)

இரங்கித்தேம்பியறிவில்லோரின்பதுன்பங்களின்மூழ்குங் .. *
குரம்பைத்திரள்களெடுத்தவற்றாற்குறையாவிதியைப் பின்செல்வர், நிரம்பப்புகன்றேனுன்பட்டநெறியிற்றுன்பந்தனைக்கேளா
யரங்கட்குவமையாந்துன்பமன்பர்க்குரைத்தாலாறுதோ .. *

(இ-ள்) அறிவில்லோர்-அஞ்ஞானிகள்— இரங்கித்தேம்பி-சலக்கமுற்று—இன்பதுன்பங்களின்மூழ்கும்- சுகதுக்கங்களிலமிழ்ந்தும்— குரம்பைத்திரள்களெடுத்தும்- தேகமநேகமெடுத்தும்—அவற்றால்- அவைகளினால்—குறையாவிதியைப்பின்செல்வர்-நிறைந்தநியதியையனுசரிப்பார்கள்— நிரம்பப்புகன்றேன்- மிகவுஞ்சொன்னேன்—நெறியில்- மார்க்கத்தில்— நான்பட்ட துன்பந்தனைக்கேளாய்-யான்பட்ட துயரத்தைக்கேட்பாய்—அரங்கட்குவமையாந்துன்பம்-அரங்களுக்கொப்பாகிய துயரத்தை— அன்பர்க்குரைத்தால் - அன்புள்ளவர்களுக்குச்சொன்னால்—ஆறுதோ-சாந்தியாகாதோ—(எ-று) [இ-ரு-க-ம்] யாவராயினும்பிராரத்தகன்மமனுபவித்துத்தீரவேண்டுமென்பதாம். (௱௬௪)

(தூருவாசமுனிசபித்ததாகக்கற்பித்துச்சொல்லுதல்)

கொத்தார்மலர்தந்தனையகன்றுகுதித்து விண்போய்ப்பொன்னுலகின்! மெய்த்தாதையச்சேர்ந்திந்திரன் முன்மேவிமீண்டிங்குறவெண்ணி; தத்தாவிண்ணின்றிழிந்திர விக்கருகேகாற்றின்ற

டநெறியா; லித்தாரணிசேர்வுறவருவானெழிலிப் பதத்திலேகுத
லும். *

(இ-ள்) கொத்தார்மலர்தந்து-புட்பக்கொத்தைக்கொடுத்து—உனையகன்று-உன்னைநீங்கி—குதித்துவிண்மேய்-பாய்ந்தாகாயத்திற்சென்று—பொன்னுலகில்-ஸ்வர்லோகத்தில்—மெய்த்தாதையைச்சேர்ந்து-உண்மையுள்ளபிதாவையடைந்து—இந்திரன்முன்மேவி-தேவேந்திரனதுசபையினிடத்திற்போய்—மீண்டு-திரும்பவும்—இங்குறவெண்ணி-இவ்விடத்தில்வரும்படியாகச்சிந்தித்து—தத்தாவினின்றிழிந்து-தாவப்படாதவாகாயத்திலின்றிறங்கி—இரவிக்கருகு-சூரியமண்டலத்தினதுபக்கத்தில்—காற்றின்றடநெறியால்-வாயுவினதுவிசாலமானமார்க்கத்தினால்—இத்தாரணிசேர்வுற-இப்பூமியிலேவந்தடைய—வருவான்-வரும்பொருட்டு—எழிலிப்பதத்திலேகுதலும்-அழகுள்ளவிந்தவிடத்திலேவரவும்—(எ-று) (௱௬௫)

(இதுவுமது)

ஏகலுற்றதுர்வாசனென்னுமுனியையெதிர்கண்டு.......... *
மாகமட்டிலடிதொழுதுமற்றுமுனிவன்றனைநோக்கி ........ *
நீகறுத்ததுகிலுடுத்தாய்நெறிதீர்பிறனைவிழைபவர்போற் .... *
போகலுற்றாயென்றவெனைப்போதமுனிவுற்றம்முனிவன் .... *

(இ-ள்) ஏகலுற்ற-(மேகமார்க்கமாகப்) போகப்பட்ட—துர்வாசனென்னுமுனியை-துருவாசரென்கின்றரிஷியை—எதிர்கண்டு-நேரேபார்த்து—மாகம்-ஆகாயத்தில்—மட்டிலடிதொழு-அளவற்ற(பெருமையுள்ள) பாதத்திலவணங்கி—மற்றுமுனிவன்றனைநோக்கி-பின்புமுனியைப்பார்த்து—நீகறுத்ததுகிலுடுத்தாய்-நீகரியவஸ்திரத்தைத்தரித்தாய்—நெறிதீர்பிறனை-தூர்த்தபுருடனை—விழைபவர்போல்-இச்சிக்கின்ற(விபசாரி)களைப்போல—போகலுற்றாயென்றவெனை-போகத்தொடங்கினையென்று சொல்லியவென்னை—அம்முனிவன்-அந்தரிஷியானவர்—போதமுனிவுற்று-மிகவுங்கோபித்து.—(எ-று) (௱௬௬)

(இதுவுமது)

இதுசொல்லுதலாலிரவுதொறுமெழிலேந்திழையா யிருத்தியெ
ன, முதுவன்சாபமுரைத்தலுமம் மொழிகேட்டிரங்கி; முனிதா
ளாம், பதுமம்புகழ்ந்துவேண்டுதற்குப் பார்த்தேனிமைப்பின்
முனிமறைந்தான், னதுகண்டுநொந்திங்கணைந்தே னணங்காந்த
ன்மையகலாதே. *

(இ-ள்) இது சொல்லுதலால்-நீயிங்ஙனமிசைத்தலால்— இரவுதொறும்-இரவுகடோறும்—எழிலேந்திழையாய்-அழகிய வாபரணங்களையணிந்த பெண்ணாகி—இருத்தியென-இருப்பாயென்று—முனிவன்-மூதுணர்ந்தமுனிவன்—சாபமுரைத்தலும்-சாபமிடவும்—அம்மொழிகேட்டிரங்கி - அந்தவசனத்தைக்கேட்டமூது—முனிதாளாம்பதுமம்-முனிவனதுபாதபங்கயத்தை— புகழ்ந்து-துதித்து—வேண்டுதற்கு-வேண்டிக்கொள்வதற்கு— பார்த்தேன்-சிந்தித்தேன்—இமைப்பின்-நொடியில்— முனிமறைந்தான்-முனியானவர்மறைந்துபோனார்—அதுகண்டு-அதைப்பார்த்து—உளநொந்து-மனம்வருந்தி— இங்கணைந்தேன் - இவ்விடத்தில்வந்தேன்—அணங்காந்தன்மை-பெண்ணாகுந்தன்மை— அகலாது-(எனக்கு)நீங்காது.—(எ-று) (௩௯௭)

(இதுவுமது)

குருவானவர்மாதவர்முதலோர்கூட்டங்காணக்கூசாம ... ... *
லிருள்வாய்மகளாவெவ்வண்ணமிருப்பேனெனவுஞ்சிகித்துவசன்
வெருவாதொழிநீபுலம்புதலான்மேவுபயனென்விதிவலியால் *
வருமேவருகவுடற்கல்லான்மாசிலறிவிற்பற்றாதே ....... *

(இ-ள்) குரு-ஆசாரியர்—வானவர்-தேவர்கள்—மாதவர்-முனிவர்கள்—முதலோர்-முதலானவர்கள்—கூட்டங்காண குழாங்களைத்தரிசிப்பதற்கு—கூசாமல்-நாணாமல்—இருள்வாய்- இராத்திரியில்—மகளாய்-பெண்ணாகி — எவ்வண்ணமிருப்பேனெனவும்-எப்படியிருப்பேனென்றுகும்பமுனிசொல்லவும்—சிகித்துவசன்-சிகித்துவசராசனானவன்—நீவெருவாதொழி-தேவர்பயப்படாதிரும்—புலம்புதலால்-இரங்குதலால்—மேவுபயனென்- வருகின்றப்பிரயோசனமென்ன—விதிவலியால் - நியதிவல்லமையினால்—வருமேவருக-வருவதுவரட்டும்—உடற்கல்லால்-சரீரத்துக்கல்லாமல்—மாசிலறிவிற்பற்றாது-களங்கமற்ற வாத்மஞானத்திற்பொருந்தாது.—(எ-று) (௩௯௮)

(இதுவுமது)

அறிவாலுயர்ந்தநீதுன்பத்தமிழ்ந்தற்குரித்தோவறிவற்ற .... *
கிரியாரன்றேவுள்ளயர்வாரொன்றுந்தேற்றத்தம்மிற்றும் .... *
பிரியாவின்பதுன்பங்கள்பிறிவற்றிருந்தாரவ்வௌவி.... .. [தான்
னெறியார்கும்பற்கணங்குருவநேர்வாய்போல்வெய்யவனுள்த்.

(இ-ள்) அறிவாலுயர்ந்தநீ-ஞானத்தினான்முதிர்ந்தநீர்—துன்

பத்து-துயரினிடத்தில்—அமிழ்ந்தற்குரித்தோ- மூழ்குதற்குரியதாமோ— அறிவற்ற-அறிவில்லாத—சிறியாரன்றே-மூடர்களல்லவா—உள்ளயர்வாரென்று - மனதிற்றுன்பப்படுவார்களென்று—தேற்றி-தெளிவித்து—தம்மிற்றம்பிரியா-தங்களிற்றாங்கள்பிரியாமல்—இன்ப துன்பங்கள் - சுகதுக்கங்கள்—பிறிவற்றிருந்தார்- பேதமில்லாமலிருந்தார்கள்—அவ்வளவினெறியாற்கும்பற்கு-அம்மட்டினிற்றிறைந்த கும்பமுனிக்கு—அணங்குநயநேர்வான்போல் - பெண்வடிவந்தாச்(செல்வது)போல—வெய்யவனொளித்தான்-சூரியன்மறைந்தான்—(எ-று)[இ-ரு-க-ம்]இரவிற்பெண்வடிவு வருதலைநோக்கிவிசனமாகக்கூறினதையாத்மாவுக்குணடோவெனத்தேற்றினதாம். (ஙசுகூ)

(இரவிற்பெண்வடிவம்வருதல்)

அந்திவரலுநியமங்களாற்றியிருந்தாரதுகாலை .......... *
முந்துபரசன்முகநோக்கிமொழிவான்கும்பன்றளர்ச்சியொடு *
இந்தவுடல்வீழ்வது போன்மேலெழுதல்போனின் றியங்குதல்
போல்! வந்துபெருநாணேரும்பெண்மைமன்றவென்னைவளைந்
ததுவே. *

(இ-ள்) அந்திவரலும்-மாலைப்பொழுதுவரவும்—நியமங்கள்-நித்தியகன்மங்களை—ஆற்றியிருந்தார்- செய்திருந்தார்கள்—அதுகாலை அக்காலத்தில்—முந்துபரசன்முகநோக்கி- முன்னேயிருக்கின்றவேந்தனதுமுகத்தைப்பார்த்து—கும்பன்-கும்பமுனியானவர்—தளர்ச்சியொடுமொழிவான்- தளர்வுடன்கூறுவார்—இந்தவுடல்-இச்சரீரமானது—வீழ்வதுபோல்-(பூமியில்)விழுவதுபோலும்—மேலெழுதல்போல்-(பெண்குறிகள்)மேலெழுகின்றதுபோலும்—இயங்குதல்போல் - விளங்குவதுபோலும்—பெருநாணேரும்பெண்மை- மிகுந்தவெட்கத்தோடுங்கூடியபெண்டன்மையானது—மன்றவென்னை- அரசனேயென்னை—வந்துவளைந்தது-வந்துசுற்றிக்கொண்டது—(எ-று) (உா)

(பெண்ணினவையவங்களைக்காட்டுதல்)

கூந்தல்வளர்கின்றதுபாராய்கொங்கையெழுகின்றதுபாராய்..*
சேர்ந்துவருமேகலைபாராய்செவியுமுன்பினுண்டான.... *
காந்தைவடிவானதுபாராய்க்காவலாவென்றிரங்கினனாய்ச்..... *
சாந்தமுறுகும்பனுமிருந்தான்றலைவன்றானுந்தளர்த்திருந்தான்,

(இ-ள்) கூந்தல்வளர்கின்றதுபாராய்-அளகம்வளர்கின்றதைப்

பார்—கொங்கையெழுகின்றதுபாராய் - தனம்வளர்கின்றதைப் பார் — சேர்ந்துவருமேகலைபாராய் - கூடவருகின்ற வஸ்திரத் தைப்பார்—செறிபுமுன்பின்னுண்டான- நெருங்கமுனைகுறியும் பின்குறியுமுடைய—சாந்தைவடிவானதுபாராய் பெண்வடிவ மானதைப்பார்—காவலாவென்றிறங்கினனாய்- அரசனென்று துக்கப்பட்டவனாய்—சாந்தமூறுகும்பமுனியிருந்தான் உபசாந் தமுள்ளகும்பமுனியுமிருந்தார்—தலைவன்றானும்- அரசனும்— தளர்ந்திருந்தான்-சோர்வுற்றிருந்த (வாசிரியரைப்பார்த்து) — (எ-று) (உாக)

(வந்தகன்மமனுபவிக்கக்கடவதென்றிரக்கமுற்றிருத்தல்)

ஞானவானீவிதிநெறியைநன்றாயறிந்தாயுறற்பால........ *
தானதற்றுவிரங்கலையென்றரசனுரைப்பவுயர்கும்பன்..... *
றானுஞ்சொல்வானினிசெயலென்றப்பா விதியையார்தடுப்பா
ர், மேனிபெண்மையாயிரவுமேவக்கடவேனென்றுரைத்து ...*

(இ-ள்) ஞானவானீ-ஞானவானாகியநீர்—விதிநெறியை-நியதி மார்க்கத்தை—நன்றாயறிந்தாய் - நன்றாகத்தெரிந்தனை—உறற் பாலதான தற்றால்-வரத்தக்கதுவந்தால்—இரங்கலையென்று-து ன்பப்படாதேயென்று — அரசனுரைப்ப-வேந்தன்சொல்ல—உ யர்கும்பன்றானுஞ்சொல்வான் மேலானகும்பமுனியுஞ்சொல்லு வார்—இனிசெயலென்-இனிச்செய்யவேண்டியதென்ன—தப் பாவிதியை-தவறாநியதியை—ஆர்தடுப்பார்-ஆர்தடுப்பார்கள்— இரவு-இராவில்— மேனிபெண்மையாய்-சரீரம்பெண்வடிவமா ய்—மேவக்கடவேனென்றுரைத்து- அடையக்கடவதானேனெ ன்றுசொல்லி—(எ-று)[இ-ங-க-ம்]பெண்வடிவத்தைக்கண்டுமய ங்காததன்மையைத்தெரிந்தனனென்பதாம். (உாஉ)

{ஏகாசனத்திற்பரிசித்திருந்துமயங்காததன்மை யைத்தெரிதல்.}

பாயலொன்றிலவ்விரவுபயின்றார்வெறிதேவிடியளவின் .... *
மேயபெண்மைதனைவிட்டுமீண்டுகும்பவடிவாக.............*
வேயவிவ்வாறிராப்பெண்ணாயிரவுபோனாற்கும்பனுமா .... *
யாயகன்னியழியாமலமர்ந்தாள்சின்னாட்கூடாலே .. ...... *

(இ-ள்) அவ்விரவு-அன்றிராத்திரி—பாயலொன்றில்- ஒருசய னத்தில்—வெறிதேபயின்றார்-சும்மாய்க்கூடி (நித்திரைசெய்தா ர்கள்)—விடியளவில்-உதயகாலத்தில்— மேயபெண்மைதனைவி

ட்டு-அடைந்தபெண்வடிவத்தைவிட்டு — மீண்டுங்கும்பவடிவாக வே-திரும்பக்கும்பமுனிபுருஷமாக — இவ்வாறு - இந்தப்பிரகார ம் — இராப்பெண்ணாய்-இரவின்மாதாகவும் — இரவுபோனால்-இ ராக்காலநீங்கினால் — கும்பனுமாய்-கும்பமுனியாகவும் — ஆயக ன்னியழியாமல-ஆகியகன்னித்தன்மைகெடாமல் — சூடாலை- சூ டாலையானவள் — இன்புளமர்ந்தாள்-சிலநாட்கூடியிருந்தாள். — (எ-று) (௨௱௩)

{புணரும்போ தின்புளவோவென்ப தறியநியமித்த மணவினை வேட்டல்.}

அன்றொர் கும்பமேனியளாயரசன்றனைப்பார்த்தொருபகலின் *
மன்றநித்தமிராப்பெண்மையுருமேன்மடவாரியல்பன்றி ... *
யென்றுளிருப்பதொருகணவனெய்தவேண்டுமுனையலது ... *
லின்றாயமூவுலகினுமியான்பேணேனன்பாற்பெருமையினால்

(இ-ள்) அன்றாள்-அந்தச்சூடாலையானவள் — கும்பமேனிய ளாய்-கும்பமுனிவடிவத்தையுடையவளாய் — ஒருபகலில்- ஒருமத்தியானத்தில் — அரசன்றனைப்பார்த்து- வேந்தனைப்பார்த்து — மன்ற-அரசனே — நித்தம்-நாடோறும் — இராப்பெண்மை உருமேல்-இரவிற்பெண்டன்மையுருமேயின் — மடவாரியல்பன்றி- பெண்களின்றன்மையல்லாமல் — என்றுளிருப்பது-எத்தனைகால மிருப்பது — ஒருகணவனெய்தவேண்டும் - ஒருநாயகனையடைய வேண்டும் — அன்பாற்பெருமையினால்-அன்பின்மிகுதியினால் — உனையலது-உன்னையல்லாமல் — மூவுலகினும் - திரிலோகத்திலும் — இன்றாயும்யான்பேணேன்-மற்றெவனையுநான்விரும்பே ன். — (எ-று) (௨௱௪)

(ஆசிரிய ரவிப்பிராயப்படி யரசனமைந்திருத்தல்)

மனைவியாகவிவாகத்தால்வரிப்பாய்நசிக்கெப்போதுமெனை .. *
யினையநியமத்திற்றீங்குநலமிரண்டுமில்லையெனமேலாம் ... ... *
நினையவிருப்பேநன்றென்றானரசனதுகேட்டுங்கும்பன் .. *
புனையுநலத்தாவணிமாதப்பூரணையின்றுபுரவலனை .... ... ...*

(இ-ள்) விவாகத்தால்-கலியாணத்தினால் — மனைவியாக- பாரி யாளாக — நிசிக்கெப்போதும்- இராவிற்கென்றும் — எனைவரிப் பாய்-என்னையேற்றுக்கொள்ளுவாய் — இனையநியமத்தில் - இப்ப டிப்பட்டதைச்செய்தால் — தீங்குநலமிரண்டும்- நரகசுவர்க்கமா கியவிரண்டும் — இல்லையெனலோடுமே- இல்லையென்று (கும்பமு

னி)சொல்லவும்—அனையவிருப்பே-அவ்விருப்பமே—நல்லறென்
றனரசன்-நல்லதென்றரசன்சொல்ல—கும்பர்-கும்பமுனியா
னவர்—அதுகேட்டலும்-அதைக்கேட்டவளவில்—புரவலனே-
அரசனே—இன்று-இன்றைக்கு—ஆணைமாதப்பராணை ஆவணி
மாதப்பருவம்—புனையுநலத்ததனு-மாங்கல்லியந் தரிக்குநல்லமை
யுள்ள (தினம்)—எ-று) (உ௱ரு)

(முகூர்த்தம் வைத்தல்)

திங்களுதிக்குங்காலத்திற்செய்கவிவாகமெனச்செப்பி ......*
யங்கணரசனொடுமேவியணியமணிப்பூண்சந்தனங்க ..... *
ளுங்கமலையிற்கொடுவந்துதூய்நீர்கங்கைதனின்மூழ்கிப் .. *
பொங்குநெறியார்கடவுளர்தென்புலத்தோர்தவத்தோர் கழல்
போற்றி. *

(இ-ள்) திங்களுதிக்குங்காலத்தில்- சந்திரோதயகாலத்தில்—
விவாகஞ்செய்கவென-கலியாணஞ்செய்யக்கடவதென்று—செ
ப்பி-சொல்லி—அங்கண்-அழகியகண்களையுடைய— அரசனொ
டுமேவி-வேந்தனுடன்சென்று—அணியும்-தரிக்கப்படுகின்ற—
மணிப்பூண்-இரத்தினாபரணங்களும்—சந்தனங்கள்- சந்தனங்க
ளும்— துங்கமலையிற்கொடுவந்து- உயர்வாகிய மகமேருவிலி
ருந்துகொண்டுவந்து—தூய்நீர்கங்கைதனின்மூழ்கி - பரிசுத்த
மாகிய சலத்தையுடைய தேவநதியில்ஸ்நானஞ்செய்து— பொ
ங்குநெறியால்-உயர்ந்தவேதமார்க்கத்தினால்—கடவுளர்- தேவர்
களும்—தென்புலத்தோர்-பிதிர்களும்—தவத்தோர்- முனிவர்க
ளு(மாகிய விவர்களுடைய)—கழல்போற்றி-பாதத்தைவணங்கி.
(எ-று) (உ௱சு)

(மணஞ்செய்தல்)

கிரியையொழியார்பலவ்விரும்பார்கிளர்கற்பகநல்கியவெண்பட்
டுரியதெனச்சாற்றினர்வெய்யோனுயர்ந்தவெற்பி னிடைச்சென்
றான், பெரியவிந்துதோன்றுதலும் பேசுமுறைமைக் கிரியைக
ளா; லரியநியமஞ்செய் துமணஞ்செய்தானரசனப்போது .. *

(இ-ள்) கிரியையொழியார்-தொழிலைத் தவிராதவர்களும்—
பலவ்விரும்பார்-ப்ரயோசனத்தை விரும்பாதவர்(களு மாணவிவ
ர்கள்)—கிளர்கற்பகநல்கிய - விளங்கியகற்பகவிருட்சங்கொடுத்த
—வெண்பட்டு-வெள்ளைப்பட்டை—உரியதெனச்சாற்றினர்- உரி
யதென்றுதரித்தார்கள்—வெய்யோன்-சூரியன்—உயர்ந்தவெற்
பினிடைசென்றான்-உயர்ந்திருக்கின்ற வஸ்தமனகிரியின் மறைந்

தான்—பெரியவிந்து-பூரணச்சந்திரன்—தோன்றுதலும்- உதயமாகவும்—வேதமுறைமைக்கிரியைகளால்- சொல்லப்பட்டமுறைமையையுடைய கருமங்களால்—அரியநியமஞ்செய்து- அரிமையானசந்தியாவந்தனஞ்செய்து—அப்போதரசன்-அப்பொழுதே சிகித்துவசவரசன்—மணஞ்செய்தான்- கலியாணஞ்செய்தான்.—(எ-று) (உளஎ)

(புணர்ந்துமகிழ்தல்-வேறு)

இவ்வாறுயர் மந்தரவெற்பிடையேமணஞ்செய்திவர்கள் .... *
கவ்வாவின்பந்துய்த்துகடஞ்சூழ்வனங்கடோறுஞ் ......... *
செவ்வாய்மயின்மன்னவனுந்திரிந்தார்தினமும்மூன்றில் ... *
வெவ்வாளரசன்றுயிலும்வேலைதனிற்சூடாலை .............. *

(இ-ள்) இவ்வாறுயர்-இவ்வண்ணமுயர்ந்த — மந்தரவெற்பிடை-மந்தரமலையினிடத்தில்—மணஞ்செய்து- கலியாணஞ்செய்து—இவர்கள்- இவ்விருவரும்—கவ்வாவின்பந்துய்த்து- பற்றில்லாத சுகத்தைப்புசித்து—கடஞ்சூழ்-மலைப்புறஞ்சூழ்ந்த-வனங்கடோறும் - கானகங்கடோறும்—செவ்வாய்மயில்- சிவந்தவாயையுடைய் மயில் போன்றசூடாலையும்—மன்னவனும்-சிகித்துவசவரசனும்—திரிந்தார்-சஞ்சரித்தார்கள்—தினமும்மூன்றில்-மூன்மூன்றுநாளில்—வெவ்வாளரசன்-கொடியவாளாயுதத்தையுடைய வேந்தன்—துயிலும்வேலைதனில்- நித்திரைசெய்கின்றசமயத்தில்— சூடாலை-சூடாலையானவள்.—(எ-று) (உளஅ)

(இடையிலரசுசெய்தல்)

சென்றுசென்றுமன்னன்றேசநீதிநடாத்தி ............. *
யொன்றும்பாயறன்னிலொழியாதவள்போன்மீளு ......... *
மன்றன்மதனிகைப்பேர்மனைவியானமாது ........... *
நின்றசிலநாளிற்பின்னெஞ்சிலொன்றைநினைப்பாள் ...... *

(இ-ள்) சென்றுசென்று-அடிக்கடிபோய்—மன்னன்- அரசனது—தேசநீதிநடாத்தி-தேசத்தை நீதியாகநடப்பித்து—ஒன்றும்பாயறன்னில்-பொருந்தாநின்றபடுக்கையில்—ஒழியாதவள்போல்-நீங்காதவளைப்போல—மீளும்-திரும்புவள்—மன்றல்-விவாகஞ்செய்த—மதனிகைப்பேர்-மதனிகையென்னு நாமத்தையுடைய—மனைவியானமாது - பாரியாளாகிய சூடாலையானவள்—நின்றசிலநாளிற்பின்- (இப்படி)யிருந்த சிறிதுநாளின்பின்பு—நெஞ்சிலொன்றைநினைப்பாள்-மனதிலொன்றைச் சிந்தனைசெ

ரீவாள்.—(எ-று) [இ-எ-க-ம்] த்னதின்பமாக மாதரின்பநீங்கி
ஞெனன்றறிந்தனமெனன்பதாம். (௨௱௯)

{ செல்வத்திலிராகமுளவோவெனப்பரிசோதிக்கத்தொடங்கல். }

உற்றபோகங்களிற்பற்றொன்றிலனுக்கென்றுந் ... ... *
துற்றபோகங்களினாற்சோதிப்போமென்றெண்ணலி ... ... ... *
கற்றமாயையாலேகைதவமொன்றிழைத்தாள் ... ... ... *
சுற்றுந்தேவர்நெருங்கச்சுரர்கோன்வனத்திற்றோன்ற ... ... *

(இ-ள்) உற்றபோகங்களில்-(இவ்வுலகத்திற்பொருந்திய போகங்களில்—இவனுக்கென்றும்-இவ்வரசனுக்கெப்போதும்—பற்றொன்றது-ஆசைபொருந்தாது—துற்றபோகங்களினால்-மிகுந்த(தேவ)போகங்களினால்—சோதிப்போமென்றெண்ணி-சோதிக்கவேண்டுமென்றுநினைத்து—கற்றமாயையால் - தானற்பியாசஞ்செய்திருக்கின்ற(அணிமாமுதலிய)வித்தைகளினால்— சுற்றுந்தேவர்நெருங்க-நான்குபுறத்திலுந் தேவர்கள்சூழ்ந்துவர—சுரர்கோன் தேவேந்திரன்—வனத்திற்றோன்ற- (இந்தக்)கானகத்திற்றோன்றும்படியாக—கைதவமொன்றிழைத்தாள்-ஒருமாயை செய்தாள்.—(எ-று) (௨௱௰)

(இதுவுமது)

வந்தமகவான்றன்னைமன்னன்கண்டுவணங்கி ... ... ... *
முந்துபூசைசெய்துமுதல்வநீயிங்கெய்த ... ... ... *
வெந்தவறமுன்செய்தேனென்னவிமையோரிறையு ... ... *
மந்தமன்னைநோக்கியன்பாலிவ்வாறறைவான் ... ... ... *

(இ-ள்) வந்தமகவான்றன்னை- வந்திருக்குந்தேவேந்திரனை—மன்னன்-அரசனானவன்—கண்டுவணங்கி- பார்த்துநமஸ்கரித்து—முந்துபூசைசெய்து-முன்னேவாராதனைசெய்து— முதல்வ-முதன்மையானவனே—நீயிங்கெய்த-நீயிவ்விடத்தில்வர—எந்தவறமுன்செய்தேனென்ன - என்னதருமத்தை முன்செய்தேனோவென்றுசொல்ல—இமையோரிறையும்-தேவேந்திரனும்—அந்தமன்னைநோக்கி-அச்சிகித்துவசவரசனைப்பார்த்து—அன்பால்-அன்பினால்—இவ்வாறறைவான் - இவ்வண்ணஞ்சொல்லுவான்.—(எ-று) (௨௱௰௧)

(இதுவுமது)

உனதுகுணத்தினலத்தாலும்பருடனான்வந்தேன் ... ... ... *

கனகவுலகுமக்கேகடவதாமங்குள்ளோர் …. … …. …. …*
நினதுவரவு நோக்கிநின்றாரம்பைமுதலோர் .. ……. …. *
வனசவதனம்மலரமார்த்தாண்டனைப்போல்வருவாய்… .. …*

(இ-ள்) உனதுகுணத்தினலத்தால்-உமதுகுணத்தினன்மையி னால்—உம்பாற்றடனுன் வந்தேன்-தேவர்களோடு மியான்வந்தேன் —கனகவுலகம்-தேவலோகம்—உமக்கேகடவதாம்- உமக்கேயா கக்கடவதென்று—அங்குள்ளோர் - அவ்விடத்திலுள்ளஸ்த்ரீகள் —நினதுவரவு நோக்கிநின்றார்- உமதுவரவைப்பார்த்திருக்கிறார் கள்—அரம்பைமுதலோர் - அரம்பைமுதலிய தெய்வஸ்த்ரீகளா கு—வனசவதனமலர-அம்புசமலரைப்போல முகமானது விக சிக்க—மார்த்தாண்டனைப்போல்வருவாய் - சூரியனைப்போலவரு வாய்.—(எ-று) (உ௱௰உ)

(இதுவுமது)

கற்பமளவுமிருந்துகடவுட்போகமெல்லாந் - - *
சிற்பமன்றித்துய்க்கச்சீவன்முத்திமன்னு - - *
அற்பந்தாழாதடையாயழைப்பான்வந்தேனென்ற - *
சொற்பங்கிகளைக்கேட்டுதூயமன்னன்சொல்வான். - *

(இ-ள்) கற்பமளவுமிருந்து-கற்பகாலமட்டுமிருந்து— கடவு ட்போகமெல்லாம்-தேவபோகங்களனைத்தையும்— சிற்பமன்றி த்துய்க்க-விசித்திரமாகப்புசிக்க—சீவன்முத்திமன்னு- சீவன்மு த்தியையுடையவரசனே—அற்பந்தாழாதடையாய்- க்ஷணநேரந் தங்காமல்வருவாயென்று—அழைப்பான்வந்தேனென்ற - அ ழைக்கும்பொருட்டு வந்தேனென்று (சொல்லியதேவேந்திரன்) சொற்பங்கிகளைக்கேட்டு-சொல்விசித்திரங்களைக்கேட்டு— தூ யமன்னன்சொல்வான் - மேலானவரசன் கூறுவான்.—(எ-று)

(இதுவுமது)

அங்குந்துறக்கத்தின்பமனைத்துமறிவேனெந்தா - *
யிங்கென்றங்கென்றில்லையெங்குஞ்சுவர்க்கமெனக்குப் - *
பொங்குஞ்சுகமேயெங்கும்பொன்றுடதனல்வேண்டேன் *
றங்கும்பதமேயென்றேசற்றும்பற்றற்றுளாப்ப. - *

(இ-ள்) அங்கும்-அவ்விடத்திலும்— துறக்கத்து- சுவர்க்கத்தி லுள்ள—இன்பமனைத்தும்-சுகங்களையெல்லாம்— எந்தாயறிவே ன்-எனதுபிதாவான தேவனேயானறிவேன்—இங்கென்று-இ வ்விடமென்றும்—அங்கென்றில்லை-அவ்விடமென்றும்பேதமில்

ல்—எனக்கு-அடியேனுக்கு—எங்குஞ்சுவர்க்கம்- எவ்விடத்து
ஞ்சுவர்க்கமேயாம்—எங்கும் எவ்விடத்திலும் — பொங்குசுக
மே-மிகுந்தசுகமேயாம்—பொன்றுடு தேவலோகத்தை—அத
னுடனேகூடவேடன் ஆசலால்விரும்பேன்—தங்கும் - நீர்வாசஞ்செ
ய்யாநின்ற—பதமொன்று-இடத்துக்குப்போயினென்று—க
ற்றுப்பிறந்துரைப்ப எவ்வளவேனுமிச்சையின்றியாசகன்சொல்
ல எ-று) [இ-ரு-க-ம்] தனதுமாயையாற் றேவேந்திரன் முதலி
யோர்களாகவந்து தேவபோகங்கொடுக்கப் பிரார்த்திக்கவுமத்
தை வொருசுகமாகத் தோற்றமற்றனதுசுகத்திற் சுகித்திருந்த
தைத் தெரிந்தனளென்பதாம். (௨௱௰௪)

## அபிமான மகங்காரமானது வேடமுனிவோவெனப் பரிசோதித்தல்.

மடங்கியமரர்கூட்டம்வந்தவழியேபோகத் - - *
தொடங்குமாயைபலவாற்சோதித்திடவுநெஞ்ச - *
மடங்கிவிடுதல்கண்டு மயலோர் மாயையாலே - - *
தடங்கண்மயில்குடாலேத்தனிச்சோதனைசெய்தனளே. - *

(இ-ள்.) மடங்கியமரர்கூட்டம் - திரும்பித்தேவகுமாரர்கள்—வந்தவழியேபோக- வந்தமார்க்கத்திற்செல்ல — தொடங்குமாயை-தொடங்காநின்ற மாயையினால்—பலவாற்சோதித்திடவும்-நாநாவிதமாகச்சோதனைசெய்யவும்— நெஞ்சமடங்கிவிடுதல்கண்டு மனநசித்ததைப்பார்த்து—அயல்-பக்கத்தில்—ஓர்மாயையால் ஒருமாயாவித்தையினால்—தடங்கண்மயில்குடாலே-விசாலமாகிய கண்களையுடைய மயில்போன்றகுடாலேயானவள்—தனிச்சோதனைசெய்தனள்-ஏகாந்தமாயொருசோதனைசெய்தாள்—(எ-று) (௨௱௰௫)

## (தானேசோரனுக்கூடல்)

திங்களுதித்தவளவிற்செபித்துக்கங்கைக்கரையிற் - *
றுங்கவாசனிருப்பத்தோகையன்னாள்புறப்போயிக் - *
கொங்குமலராணிறைந்தகோலவெளியொன்றிற் - *
றங்குமொருதூர்த்தனைத்தான்சங்கற்பித்துப்புணர்ந்தாள். *

(இ-ள்) திங்களுதித்தவளவில் - சந்திரோதயமானசமயத்தில்—கங்கைக்கரையில்-கங்காதீரத்தில்—செபித்து-செபஞ்செய்து—துங்கவாசனிருப்ப- பரிசுத்தமுள்ள சித்துவாசனிருக்க—தோகையன்னாள்-மயிலுக்கொப்பாகிய குடாலேயானவள் —புறம்போயி-புறம்பாகிய(கொடியவீட்டிற்)சென்று—கொங்குமலர்

ராணிறைந்த - கோங்குமலர்களினானிரம்பிய—கோலவமளியொ ன்றில - அழகிய வொருசயனத்திலே—தக்கு மொருதூர்த்தனை - வ சிக்கின்ற வொருதூர்த்தபுருடனை—தான்சங்கற்பித்தது - தானுண் டாக்கி—புணர்ந்தாள் - கூடினாள். —(எ-று) (உ௱௰௯)

(அரசன்கண்டுமகிழ்தல்)

சந்திரமுடித் துமாதைச்சாரமேருமுந்தேடி... .. .... .... *
யந்தவழியிற்புணர்ந்துமகிழுமவரைநோக்கிச் .... ...... *
சிந்தைவிகற்பமின்றிமகிழ்ந்நீங்களா .. .... ... *
முந்திலிடையூற்றநீர்மூயங்குமென்றுபோனான் .... .......*

(இ-ள்) சந்திரமுடித்து - சந்திரயாவந்தனைச் செய்து—மாதை - மத னிகையாமென்பெண்ணை—சாரமேருமுந்தேடி - மலைப்பக்கங்களெல் லாந்தேடி—அந்தவழியில் - வரப்பட்ட மார்க்கத்தில்— புணர்ந்து மகிழும் கூடிக்களிக்கின்ற—அவரைநோக்கி - அவர்களைப்பார்த் து—சிந்தைவிகற்பமின்றி - மனேவிகற்பமில்லாமல்— சித்தமகிழ்ந் து - மனமகிழ்ச்சியாய்—அங்கவரை - அவ்விடத்திலவர்களை— முந் த - முன்னனுபவித்தபிரகாரம்— இடையூறற - விக்கினமில்லாம ல் - நீர்மூயங்குமென்றுபோனான் - நீங்கள்புணருங்களென்று சொ ல்லிப்)போனான்.—(எ-று) (உ௱௰௧)

(தூர்த்தவிலக்கணத்துடனெதிரோதிற்றல்)

போகிமறைந்துமுகூர்த்தம்போனபின்னரிவளும் - - *
வேகியாதுபோனான்விகற்பமின்மைகாண்பா - - *
னேயமளித்தொடர்ச்சியெழிலும்வடிவுந்தோன்ற - *
யோகிமுன்னர்நின்றுளொதுங்கிநாணிவணங்கி- - *

(இ-ள்) மறைந்துபோகி - மறைந்துபோய்—முகூர்த்தம்போ னபின்னர் - இரண்டுநாழிகைகழிந்தபின்பு—இவளும் - இந்தமத னிகையும்—வேகியாதுபோனான் - கோபிக்காமற்போனவ (ரானசி யவரசனிடத்தில்)—விகற்பமின்மை - விகற்பமில்லாமையை— காணபான்வேண்டி - பார்க்கும்படி போய்—அமளித்தொடர்ச்சி - படு க்கையின்றொடர்பும்—எழிலும் - (அதிசயமழகும்— வடிவுந்தோ ன்ற - அதி)ரூபவழகுந்தோற்றும்படி—யோகிமுன்னரொதுங்கி - இராசயோகிமுன்புபதுங்கி— நாணிவணங்கிநின்றாள் - வெட்கத் துடனவனைவணங்கிநின்றனள்.—(எ-று) (உ௱௰௮)

(அரசன்குளிர்ந்துரைத்தல்-வேறு)

மதனிகைப்பெயர்மங்கையுமிவ்வணம்வருந்தி.. ....... ......*

மமொன்றறியார்-ஒருகாரியமுந்தெரியமாட்டார்கள்—ஆதலால்-
ஆதலினால்—எனதரும்பிழை-என்னுடையவரிதானதப்பிதத்தை
—பொறுத்தருளென்ன-க்ஷமித்தருள்வாயென்று (மதனிகைசொ
ல்ல)—போதபாரகன் - ஞானபாரகனானசித்தராசன்—மதனி
கைக்கு-மதனிகையான(பாரியாளுக்கு)இவ்வுபாயகன்றான் - இந்
தவசனத்தைச்சொன்னான்—(எ-று) (௨௨௧)

(அரசன்சமதிருஷ்டியிலிருத்தல்)

வானிலேமரமுளைக்கினுமுனியென்கண்வாரா ................ *
ஆனமேலவரிகழ்வமொன்றன்னமேயுனை.................. *
மேனயந்துபெண்ணெனவிரும்பலனென்றுவேந்த............... *
னீனமில்லதோர்சமமுறுபார்வையோடிருப்ப.............. *

(இ-ள்) வானில்-ஆகாயத்தில்—மரமுளைக்கினும்- விருக்ஷமு
ண்டானாலும்—முனியென்கண்வாரா- கோபமென்னிடத்தில்வர
மாட்டாது—ஆனமேலவர்-ஆகியசத்துக்கள்—இகழ்வமொன்று-
நிந்திப்பார்களென்(றும்முவந்தயன்றி)—அன்னமே - அன்னத்
தைப்போலநடையையுடையவளே—உன்னைமேனயந்து - உன்
னைமேலாகவிரும்பி—பெண்ணெனவிரும்பலனென்று- மனைவி
யாகவிசிக்கிலனென்றுசொல்லி—வேந்தன் - சித்தராசனு
னவன—ஈனமில்லது-குறைவில்லாததான—ஓர்சமமுறு- ஒப்ப
ற்றசமத்துவமுள்ள—பார்வையோடிருப்ப- திருஷ்டியுடனிருக்
க—(எ-று) [இ-அ-க-ம்] ஆடியானவக்கரப்பின்மையைக்கண்
டனமென்பதாம். (௨௨௨)

(சின்மாத்திரமாயிச்சகலபற்றையுநீக்கினனெனல்)

கண்டுநின்றகூடாலையுங்கருத்திறனினைவான்.................... *
மண்டிராகமுங்கோபமும்வேறறமாய்த்தான் ........... *
மிண்டுபோகமுஞ்செல்வமுமேவிடானிவை ........... *
திண்டிறற்புயன்ஞானத்தின்கலைகண்டுசேர்ந்தான் .........*

(இ-ள்) கண்டுநின்றகூடாலையும்- பார்த்திருந்தகூடாலையான
வளும்—கருகத்திறனினைவாள்-மனதிறுதிசெய்திட்டாள்—மண்டி
ராகமும்-மிகுந்தகாமத்தையும்—கோபமும் - குரோதத்தையும்
—வேறறமாய்த்தான்- மூலத்தோடுகெடுத்தான்—மிண்டுபோக
மும்-மிகுந்தபோகங்களும்—செல்வமும்-சிறந்தசித்திகளும்—
இவைமேவிடான்- இவ்வாசையடையமாட்டான்—திண்டிறற்

டியன் - வலியபுசத்தையுடையவரசனானவன் — ஞானத்தின் - ஞானத்தினாலே — கலைக்கண்டுசேர்ந்தான் - முடிவைத்தரிசித்தடைந்தான் — (எ-று) (உஉக)

{ இனிப்பரிசோதிக்குஞ்சருத்தையம்போக்கவந்தம
றவையநீக்கிச்சூடாலையாகநிற்றல். }

மறைதன்பட்டிலிமதனிகைவடிவினைமாற்றி ......*
முறைமையானசூடாலையாய்முன்னிற்பவென்று ......*
யிறைவன்முன்புசூடாலையாய்த்தோன்றவுமிவளைப் ......*
பொறையினின்றவனோக்கிநல்வியப்பொடுபுகலும் ......*

(இ-ள்) மறைதன்பட்டு - மறைந்திருப்பதுபோலும் — இனிமதனிகைவடிவினைமாற்றி - இப்போதுமதனிகையென்னுமுருவத்தையொழித்து — முறைமையான - தனக்குமுறைமையாயிருக்கின்ற — சூடாலையாய் - சூடாலைவடிவத்தையுடையவளாய் — முன்னிற்பவென்று எதிரேநிற்பேனென்றுநினைத்து — இறைவன்முன்பு - அரசன்முன்னே — சூடாலையாய்த்தோன்றவும் - சூடாலையாகத்தோற்றவும் — இவளை - இச்சூடாலையை — பொறையினின்றவனோக்கி - உபசாந்தத்திலிருந்தவன்பார்த்து — நல்வியப்பொடுபுகலும் - நல்லவதிசயத்துடன்சொல்லுவார் — (எ-று) (உஉச)

(அரசன்வினவுக்குத்தரங்கூறல்)

வடிவும்வார்த்தையுமொழுக்கமுமற்றுளகுணமு ......*
முடிவிலாதசூடாலைபோற்றோன்றினைமுன்னே ......*
நெடியகண்ணினீயாரெனநிருபதிகேட்பக் ......*
கடிமணஞ்செய்சூடாலைநானெனமற்றுங்கழறும் ......*

(இ-ள்) வடிவும் - உருவமும் — வார்த்தையும் - வசனமும் — ஒழுக்கமும் - அடக்கமும் — மற்றுளகுணமும் - இன்னமுண்டாகிய சகலகுணங்களும் — முடிவிலாதசூடாலைபோல் - அளவற்றிருக்கின்றசூடாலையைப்போல — முன்றோன்றினை - (என்) முன்றோற்றினாய் — நெடியகண்ணி - நீண்டகண்களையுடையவளே — நீயாரென - நீயாரென்று — நிருபதிகேட்ப - அரசன்கேட்க — கடிமணஞ்செய் - நீர் கலியாணஞ்செய்த சூடாலைநானென - சூடாலையானவள்யானென்றுசொல்லி — மற்றுங்கழறும் - இன்னமுஞ்சொல்லுவாள் — (எ-று) (உஉரு)

(மறுவேடங்கொண்டுவந்தவளடியேனேயெனல்)

ஒப்பவேடமுமதனிகைவேடமுங்கொடுநா ......*

டியாகப்பிரகாசிக்கின்றசூடாலையினது—குயாசலந் தழீஇநெடிதிருந்து - தனகிரியைத்தழுவிவெகுநேரமிருந்து—ஒன்றுமேற்கூறுஞ்-ஒன்றையுமேற்சொல்லாதவனாய்—நியாயமன்னவன் - நீதியுள்ளவரசன்—நிமிடம்-ஒருக்ஷணம்—ஆநந்தத்தமிழ்ந்தனன்-ஆநந்தத்தின்மூழ்கினான்—(எ-று) (உஉஅ)

(கைம்மாறுளவோவெனவினவுதல்)

மடியின்மேலந்தவஞ்சியைவைத்தவனுரைப்பான் ........ *
முடிவில்பேரிருட்குகைநிகர்மோகநின்றென்னை ........ *
நெடியபுந்தியாலுய்த்தனையுனக்கெவர்நிகரோ ........... *
கொடிமருங்குலாயியற்றுகைம்மாறுமொன்றுளவோ .... *

(இ-ள்) மடியின்மேல்-துடையின்மேல் — அந்தவஞ்சியை வைத்து-அந்தசூடாலையைவைத்துக்கொண்டு— அவனுரைப்பான்-அவ்வரசன்சொல்லுவான்—முடிவில்-அளவற்ற— பேரிருட்குகைநிகர்-பெரிதான விருண்முழைக்கொப்பாகிய—மோகநின்றென்னை-மோகத்திலிருந்தவென்னை—நெடியபுந்தியால் - விசாலமானவறிவினால்—உய்த்தனை-கரையேற்றினாய் — உனக்கெவர்நிகர்-உனக்கொப்பானவர்கள்—கொடிமருங்குலாயி-கொடிபோன்றவிடையையுடையபெண்ணே—இயற்று- செய்கின்ற—கைம்மாறுமொன்றுளவோ - வதிலுபகாரமொன்றுண்டோ சொல்லாய்.—(எ-று) (உஉகூ)

(இதுவுமது)

வருபவக்கடற் கரையிலாய்நிராசையைமருவுந் ......... *
தருமமேயிதற்கென்கைம்மாறுளதெனச்சாற்றத் ........ *
தெரிவையோதுவாளுணங்குபல்கிரியையிற்றியங்கும் ...... *
கருமங்கண்டுனையுய்விக்கநாடினேன்கவன்று .............. *

(இ-ள்) வருபவக்கடல்-வராநின்ற சநநசாகரத்தின்—கரையிலாய்-கரையேறியிருப்பவனே—நிராசையைமருவும் - நிராசையைப்பொருந்துகின்ற—தருமமே-நீதியானவனே—இதற்கென் கைமாறுளது-இதற்கென்னபிரதியுபகாரமிருக்கின்றது—எனச்சாற்ற-என்(றரசன்)சொல்ல—தெரிவையோதுவாள்-சூடாலையானவள்சொல்லுவாள்—உணங்கு-வாடுகின்ற—பல்கிரியையிற்றியங்கும்-பலதவத்தொழிலாற்கலங்குகின்ற—கருமங்கண்டு- கன்மத்தைப்பார்த்து—உனையுய்விக்க-உன்னைக்கரையேற்ற— கவன்று-வருத்தமாய்—நாடினேன்-தேடிவந்தேன்.—(எ-று) (உஙய)

தாக்கினைப்படியே—திருயன்-அரசனனையான்— செய்தனனென்றனன்-செய்வேனென்றுசொல்லினன்—உற்றதெனில் - நீயடைந்ததிதுயரால்—பேதைமையான்மறைபொழிந்துமற்ற-அறிவின்மையைமாத்திரந்தள்ளி—முன்னுள- முன்னமேயுள்ள—இயற்கையிலிருப்பதாமழக்கே - ஆசியல்பிலிருப்பதே நியாயமாம்.—(எ-று) (௨௬௫)

{ துறவுமாறுசென்மமாதலா லதைநீக்கினதற் கடையாள யாகப்பட்டாபிஷேகஞ்செய்யவைத்தனளுஞ்செய்தல். }

சிறிதுகாலநாமிவ்வகையிருந்துபின்றேகம் - - *
பிரியுநாளந்தநிலையினைப்பெறுதுமாலென்ன - *
நெறிசெல்வேந்தனுமியைந்தனனேரிழையெழுந்து - *
குறிகொள்சங்கற்பவிதியினாலிவையிவைகொணர்ந்தான். - *

(இ-ள்) நாம்-யாம்—சிறிதுகாலம்-சிலகாலம் — இவ்வகையிருந்து-இந்தப்ரகாரந் (ஜீவன்முக்தனாயிராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண்)டிருந்து—பின்-பின்பு—தேகம்பிரியுநாள்-சரீராந்தத்தில்—அந்தநிலையினை-அந்தவிதேககைவல்யத்தை—பெறுதுமென்ன அடைவோமென்று (சூடாலையானவள்) சொல்ல—நெறிசெல்வேந்தனும் நீதியிற்செல்லாநின்றவரசனும் — இயைந்தனன்-சம்மதித்தான்—நேரிழையெழுந்து - சூடாலையெழுந்து—குறிகொள்சங்கற்பவிதியினால்-குறிப்பாகக்கொண்டசங்கற்பநியமத்தால்—இவையிவைகொணர்ந்தாள் - இவையிவைகளைக்கொண்டுவந்தாள்.—(எ-று) (௨௬௬)

(முடிசூட்டல்)

எழுவாரிநீர்மணிக்குடத்திவனைநீராட்டிக் - - *
கெழுலாமணித்தவிசிடைக்கிளர்வுறவைத்து - - *
வாழியென்றனளளவறுசேனையும்வகுத்தாள் - *
வேழவெம்பரித்தேரொடுவீரரால்விளங்க. - - *

(இ-ள்) எழுவாரிநீர்-சத்தசமுத்திரத்தின்றீர்த்தங்கணிறைந்த—மணிக்குடத்து-இரத்தினகும்பங்களினால்—இவனைநீராட்டி-இவனைஅபிஷேகஞ்செய்வித்து—கெழுலாம்-ஒளிபொருந்திய—மணித்தவிசிடை-இரத்தினாசனத்தில்—கிளர்வுறவைத்து-ப்ரகாசிக்கும்படியிருத்தி—வாழியென்றனள் - வாழக்கடவாயென்றுசூடாலையானவள் பட்டாபிஷேகஞ்செய்தாள்—வேழம்- கசங்களினாலும்—வெம்பரி-வேகமுள்ளதுரகங்களினாலும்—தேரொடு-

இரதங்களினாலும்—விரரால்-பதாதிகளாலும்—விளங்காப்பிரகாசிக்கும்படியாக—அளவற்றசேனையும்வருந்தாள்-அளவற்றபடைகளையுமுண்டாக்கினாள்.—(எ-று) (உகூஎ)

(சதுரங்கசேனையுங்கற்பித்துப் பட்டணத்துக்கேகுதல்)

இனையவேலையிலிசைபொருந்தின்பமேயியற்று - - *
மனையதேவிசூடாலையுமரசனுமெழுந்து - - *
புனையுங்கைம்மாற்கொண்டனர்பொன்னகர்நோக்கி - *
வினைசெய்நாற்பெரும்படையொடுமகிழ்வுறமீண்டார். - *

(இ-ள்) இனையவேலையில்-இப்படிப்பட்டசமயத்தில்—இசையபொருந்து-மனமொத்து—இன்பமேயியற்றும்- சுகத்தையேசெய்கின்ற—மனையதேவிசூடாலையும்-அப்படிப்பட்டமனைவியானசூடாலையும்—அரசனும் - இராசனும்—எழுந்துபுனையுங்கைம்மாமேற்கொண்டனர்-எழுந்திருந்தலங்கரித்த யானைமேலேறினார்கள்—பொன்னகர்நோக்கி-அழகியபட்டணத்தைப்பார்த்து— வினைசெய்-யுத்தஞ்செய்கின்ற—நாற்பெரும்படையொடும்-சிறந்தசதுரங்கசேனைகளோடும்—மகிழ்வுறமீண்டார்- சந்தோஷமாகத்திரும்பினார்கள்.—(எ-று) (உகூஅ)

(சீவன்முத்தியையும்விதேகமுத்தியையுங்கொடுத்தல்)

புரியைநண்ணலுநகருறுதானைபோமென்று - *
வரிசையாலெதிர்கொளவிருதானையும்வயங்கப் - *
பரிவினண்ணினர்நகர்பதினாயிரம்வருடந் *
தெரிவையோடிருந்தழிவிலாப்பதம்பின்புசேர்ந்தான். - *

(இ-ள்) புரியைநண்ணலும்- பட்டணத்தையடைந்தவளவில்—நகருறுதானைபோமென்று- பட்டணத்திலுள்ள சதுரங்கசேனையைநடவுமென்று சாமந்தர்கணடத்த)—வரிசையால்-கிரமமாக— எதிர்கொள-எதிர்ப்பட்ட—இருதானையும்வயங்க- இரண்டுசேனையும்விளங்க—பரிவினகர்நண்ணினர் - அன்பிலுற்பட்டணத்தையடைந்தவர்களாய்--பதினாயிரம்வருடந்தெரிவையோடிருந்து-பதினாயிரமாண்டு நாயகியுடன்கூடியிருந்து—அழிவிலாப்பதம்-விதேககைவல்யத்தை—பின்புசேர்ந்தான் - பின்படைந்தார்.— எ-று) [இ-சா-க-ம்] பதினாயிரம்வருடஞ் சீவன்முத்தராயராசாங்கஞ்செய்து மேல்விதேகமுத்தியை யடைந்தனனென்பதாம். (உகூகூ)

தனத்தையாதியாஞ்சகலமும்விட்டனன்றனியனாய்க் கசன்சென்
று வனத்தின்மேவினனெட்டியாண்டிருந்தனன்மறித்தவன் பி
தாவந்தான். *

(இ-ள்) அனந்தமாம்-அனந்தமாகிய—மகரங்களுக்கு-மகர
மச்சங்களுக்கு—உறைபுளாய்-வசிக்கின்றவிடமாகி — அகன்ற-
விசாலப்பொருந்திய—இப்பவேலை - இந்தச்சநநசமுத்திரத்
தை—கனந்தரு-கனத்தைத்தரான—ஓர்சாலயாகத்தினால் - ஒப்பற்ற
சகலயாகத்தினால்—கடக்கலாமென்றோத - தாண்டலாமென்று
(குருவானவர் சொல்ல—தனத்தையாதியாம்- சொன்னமுதலா
கிய—சகலமும்விட்டனன்-யாவையும்விட்டு—தனியனாய் - தனி
த்தவராகி—கசன்சென்றுவனத்தின்மேவினன் - கசனானவர்போ
ய் வனத்திலடைந்து—எட்டியாண்டிருந்தனன்-எட்டுவருடமி
ருந்தார்—மறித்தவன்பிதாவந்தான் - திரும்பவுமவருடைய தந்
தையான குருவந்தார்.—(எ-று) (௩)

(அஃதுமனமெனக்கூறவஸ்திரமுதலியவையை நீக்குதல்)

வந்ததந்தையைவணங்கியேசகலமுமாற்றியெட்டாண்டு.. *
சிந்தையற்றிருந்துந்துயர்தீர்ந்திலனிமலனேயென்னென்று *
நொந்துகூறலுஞ்சகலமுநீக்கெனத்துவன்றுமீளவும்போனான் *
றந்தைபோனபின்வற்கலைமுதலியசகலமுமறநீற்றான் ...*

(இ-ள்) வந்ததந்தையை-வந்தபிதாவை—வணங்கி-தொழுது
—சகலமுமாற்றி-யாவையும்விட்டு—எட்டாண்டு எட்டுவருடம்
—சிந்தையற்றிருந்தும்-மனமற்றிருந்தும்—துயர்தீர்ந்திலேன்-
துன்பத்தை நீங்கிலன்—நிமலனே-நின்மலமானவனே— என்னெ
ன்று-இதென்ன(காரண)மென்று—நொந்துகூறலும்-துன்பமு
ற்றுகசமுனியானவர்சொல்லவும்—சகலமுநீக்கென- யாவையுந்
தள்ளுவாயென்று—துவன்று-சொல்லி—மீளவும்போனான் - தி
ரும்பவும்போயினன்—தந்தைபோனபின்-பிதாவானவர் சென்
றபின்பு—வற்கலைமுதலிய-மரவுரிவஸ்திரமுதலான—சகலமும்-
யாவையும்—அறநீற்றான் · ஒருங்கேயொழித்தான்.—(எ-று) (௪)

(புறப்பற்றுநீக்கத்தைச்சகலத்யாகஞ்செய்தேனெனல்)

பானுமாமதிமுகிலுடுமுதலியபற்றறுசரற்காலம் ........ *
வானமொத்தனன்றபியனாய்க்கசன்சென்றுவனத்தின்மீளவுந்தா
தை; யானவன்றனையெய்தினனன்பினாலடிதொழுதயர்வெய்தி *
யானனிந்துளவற்கலைமுதலியயாவையுமறநீத்தேன் ... .... *

(இ-ள்) பானு-சூரியனும்—மாமதி-அழகுள்ள சந்திரனும்—முகில்-மேகமும்—உடுமுதலிய-நக்ஷத்திரமுமுதலாகிய—பற்றுசார்காலம்-பற்றற்றசார்காலத்தன்—வானமாத்தனன்-ஆகாயத்துக்கொப்பானான்—தமியனாய்-தனியனாய்—கசன்சென்று-கசமுனிபோய்—மீளவும்-திரும்பவும்—வனத்தில்-கானகத்தில்—தாதையானவன்றனை-தந்தையானகுருவை—எய்தினன்-அடைந்தவனாய்—அன்பினால்-அன்பினால்—அடிதொழுது-பாதத்தலைவணங்கி—அடர்வெய்தி-துன்பமடைந்து—யானணிந்துள-நான்றரித்திருக்கின்ற—வற்கலைமுதலிய-மரவுரிமுதலாகிய—அனைத்தையும்-யாவையும்—அறநீத்தேன்-ஒருங்கேதள்ளினேன். (எ-று) (௫)

{ அகப்பற்றைநீக்கும்படி மனோநீக்கமே சகலத்யாகமெனல். }

யாதுநீத்துமென்பாலிளைப்பாறிலேனினிச்செயலேதென்னத் *
தாதைகூறுவான்மனத்தையேயுலகெலாஞ்சகலமென் றுரைசெ
ராதலால் மனமகற்றுதல்சகலமுமகற்றுதலதனாலே .. .. [யிவ
கேதநீங்குமென்றகன்றனன் மந்திரிகிளர்கசனிது செய்தான்.. *

(இ-ள்) யாதுநீத்தும்-எதைநீக்கியும்—என்பால்-என்னிடத்தில்—இளைப்பாறிலேன்-விஸ்ராந்தியடைந்திலன்—இனிச்செயலேதென்ன-இனிச்செய்யவேண்டுவதென்னவென்றுகசன்கேட்க—தாதைகூறுவான்-பிதாவானவர்சொல்லுவார்—மனத்தையே-மனதையே—உலகெலாம்-உயர்ந்தோர்களனைவரும்—சகலமென்றுரைசெய்வர்-சகலமென்றுசொல்லுவார்கள்—ஆதலால்-ஆகையினால்—மனமகற்றுதல்-மனதைநீக்குதலே—சகலமுமகற்றுதல்-சகலமுநீக்குதல்—அதனால்-அச்சகலத்யாகத்தினால்—கேதநீங்குமென்று-துன்பநீங்குமென்றுசொல்லி—மந்திரியகன்றனன்-குருவானவர்நீங்கினார்—கிளர்கசன்-விளங்காநின்றகசமுனியானவர்—இது செய்தான்-இதைச்செய்தார்.—(எ-று) (௬)

(மனமேதெனவிசாரித்தலுக்ககம்பாவமேமனமெனல்)

சித்தமேதெனநாடினனறிந்திலன்றேகமாதிகளெல்லாஞ் *
சித்தமன்றெனிற்குறைசெயாவிதனையான்றீர்ந்துமென் பயனெ
ன்னச், சித்தமேதெனச்சுரர்குருவிடத்துறச் சென்றுகேட்டலு
மன்னோன், சித்தமாவதுநாமெனச்செப்புவர்சித்தத்தை யறிவுற்
றோர். *

(௭)

(இ-ள்) சித்தமேதெனநாடினன்- மனமியாதென்றாராய்ந்தனன் —அறிந்திலன்-தெரிந்திலன்—தேகமாதிகளெல்லாம்- சரீரமுதலானசகலமும்—சித்தமன்றெனில்-மனமல்லவானால் — குறைசெயா-குறைவுசெய்யாது—இதனை - இச்சரீரமுதலியவைகளை—யான்நீர்ந்துமென்பயனென்ன - யானீங்கியுமென்ன ப்ரயோசனம்—சித்தமேதென-சித்தமானதெதுவென்று— சுரர்குருவிடத்துறச்சென்று-தேவகுருவினிடத்திற்போய்—கேட்டலும்-கேட்கவும்—அன்னான்-அத்தேவகுருவானவர் — சித்தமாவது-மனமானது—சித்தத்தையறிவுற்றோர்-மனதையறிந்தசத்துக்கள்—நானெனச்செப்புவர்-அகம்பாவமென்று சொல்லுவார்கள்.—(எ-று) (எ)

{அகம்பாவமெங்ஙனங்கெடுமெனிலஃது சுருவிற்கெடுமெனப்பரமபாவனைபோதிக்கத்தொடங்கல்}

உயிர்களியாவையுமுள்ளுறநானெனவுன்னுபாவனைதானே *
செயிர்செய்சித்தமென்றுரைத்தலுமிங்கிதுதீர்ப்பதுமிகவன்பா
ம், வயிரமாவதுதீர்வதெவ்வகையெனமறித்துமந்திரிசொல்வான்
வெயில்செய்துன்பமோர்சிறிதிலையகங்கரம்விடமிகவெளிதாகும்

(இ-ள்) உயிர்களியாவையும்·பிராணிகளனைத்தையும் — உள்ளுற-அகத்திற்பொருந்த—நானென-நானென்று — உன்னுபாவனைதானே - நினைக்கின்றபாவனையே—செயிர்செய்-குற்றஞ்செய்கின்ற—சித்தமென்று-மனமென்று;—உரைத்தலும்-தேவகுரு சொல்லவும்—இங்கிது-இவ்விடத்திலிதை— தீர்ப்பது-நீக்குவது —மிகவன்பாம்-மிகவும்வலிமையாம்—வயிரமாவது - இப்படிப்பட்ட வயிரமானது—தீர்வதெவ்வகையென-நீங்குவதெப்படியென்று கசன்கேட்க—மறித்தும்-திரும்பவும்— மந்திரிசொல்வான்-தேவகுருசொல்லுவார்—வெயில்செய்துன்பம்- காய்கின்றதுன்பமானது—ஓர்சிறிதிலை-அற்பமுமில்லை— அகங்கரம்விட-அகங்காரநீக்குதற்கு—மிகவெளிதாகும்-மிகவுமிலேசாம்(எ-று)

(பிரமபாவனையாலகம்பாவநீங்கிவிஸ்ராந்தியுண்டாமெனல்)

அலர்கசக்குமுன்னிமைக்குமுனகங்கரமகற்றுகவெளிதாகும் *
பலவுரைப்பதென்னேகமாயநந்தமாய்ப்பரமசித்தேயாகிக் *
குலவுசுத்தமாம்விண்ணினுநுண்ணிதாங்குறைவிலாப்பொருணி
ற்குஞ், சலனமற்றதைப்பாவனைசெய்துபசாந்தனாயிடர்தீர்வாய்

(இ-ள்) அலர்கசக்குமுன்-புட்பத்தைக்கசக்குமுன்னும்—இ

மைக்குமுன்-இமைத்தலுக்குமுன்னும்—அகங்காம்-அகங்காரத்தை—அகற்றுதவெளிதாகும்-நீக்குதல்சுலபமாகும்— பலவுரைப்பதென்-பலசொல்லவேண்டியதென்ன—ஏகமாய்- ஒன்றாகியும்--அநந்தமாய்-முடிவில்லாததாகியும்—பரமசித்தேயாகிக்குலவு சுத்தமாம்-பரமஞானமாகியும் பொருந்தியபரிசுத்தமாகியும்—விண்ணிலுநுண்ணிதாய்க்குறைவிலாப்பொருணிற்கும்-ஆகாயத்திலுஞ்சொச்சமாகியுமிருக்கின்ற பூரணவஸ்துவிருக்கும்—சலனமற்றதைப்பாவனைசெய்து-சஞ்சலமில்லாமலவ்வாத்மாவைத்தியானித்து—உபசாந்தனாய்-உபசாந்தத்தையுடையவனாய்— இடர்தீர்வாய்-துன்பநீங்குவாய்.—(எ-று) (கூ)

{ தத்துவபாவனையா லசத்தான வகம்பாவமெங் கேயிருக்குமெனல். }

சுத்தமித்தையேயாதலிலகங்காரந்தொலைந்துபோமெய்யான- *
தத்துவந்தனைநினைதலாற்சித்திலேசாற்றகங்கரமெங்கே .... *
மெத்துநீரிலேபுழுதியுங்கனலிலேமேவுதோயமுமுண்டோ .. *
நித்தருபத்தைநினைந்திலனென்னுநிச்சயமறநிற்பாய் .... ...*

(இ-ள்) சுத்தமித்தையேயாதலில்- முழுதுமசத்தியமேயாதலால்—அகங்காம்-அகங்காமானது—தொலைந்துபோம்- கெட்டுப்போகும்—மெய்யான-சத்தியமாகிய— தத்துவந்தனைநினைதலால்-ஆத்மாவைச்சிந்தித்தலினால்—சித்தில்-ஞானத்தில் — சாற்றகங்கரமெங்கே-சொல்லியவகங்காமெங்கேயிருக்கும்— மெத்துநீரில்புழுதியும்-மிருதுவானசலத்திற்றூளியும் — கனலில்- அக்கினியில்—மேவுதோயமுமுண்டோ-மேவாநின்ற சலமுமுண்டாயிருக்குமோ—நித்தருபத்தை-நித்தியஸ்வரூபத்தை— நினைந்து-சிந்தித்து —இவனுமெனனும்.இவனுனென்கின்ற— நிச்சயமறநிற்பாய்-மெய்ம்மையறும்படியிருப்பாய்.—(எ-று) (ம)

{ விடயத்தோற்றமின்றிச் சுயஞ்சித்தாய் விளங்கிநிற்பாயெனல். }

திக்குங்காலமுமுதலியவசத்துறுசிறுவடிவறத்துன்பந் .... *
தொக்கவன்னவற்றன்மறையாமலேசூக்கமாய்நொய்தாகி..... *
மிக்கசோதியாயனைத்துமாயொன்றுமாய் மெய்யறி வொன்றே
யாந்,தக்கவிற்நிலைநில்லெனவுரைத்தனன்றலைமையாமுபதேசம்

(இ-ள்) திக்கும்-திசையும்—காலமுமுதலிய - காலமும்முதலாகியவைகளின்—வசத்துறு-வசத்திற்பொருந்திய— சிறுவடிவ

ற-அற்பமாகியவடிவமில்லாமல்— நுண்பந்தொக்க- நுக்கமான
துநிறையும்படி—அன்னவற்றால்- அப்படிப்பட்டவைகளால்—
மறையாமல்-மறைவுபடாமல்—சூக்கமாய்-சூட்சுமமாகியும்—
நொய்தாகி சொச்சமாகியும்— மிக்கசோதியாய்-மேலான (சுய
ஞ் சோதியாகியும்— அனைத்துமாய்-எல்லாமாகியும்— ஒன்றுமா
ய்-ஏகமாகியுமிருக்கின்ற—மெய்யறிவொன்றேயாம்-தத்துவஞா
னமானதொன்றேயாகும்—தக்கவிந்நிலை-தகுந்தவிந்தநிச்சயம்
—நிலைலெனை- (உனதாத்மஸ்வரூபமென்றறிந்து) நிற்பாயென்
று—நிலைமையாமுபதேசம்- முதன்மையான வுபதேசத்தை—
உரைத்தனன்- (பிரகஸ்பதிபுத்திரன்) சொன்னார்.—(எ-று) [இ-
யக-க-ய] உள்ளதான ஸ்வானுபூதிநிஷ்டையிருப்பில்லாததான வ
கம்பாவத்திற்கு யஃதே சகலத்யாகமென்பதை யறிவித்ததாம்.

(ஸ்ரீராகவற்கிதவுபதேசஞ்செய்தல்)

சீவன்முத்தனாநிலைமைபெற்றகங்காரந்தீர்ந்தெனதென்னாமன் .. *
மேவுமுட்டபந்தம்வீழ்ந் துபோய்ப்புந்தியில்விகற்பங்களனைத் து
ம்போய்ப்; பாவமுற்றியகசனின்றநிலையினீபற்றுத லறநிற்பாய்
கேவலத்திந்தவகங்காரம்பொய்ம்மையாங்கெடுத்தல்பற்றுதல் வே
ண்டாம். *

(இ-ள்) சீவன்முத்தனும்-சீவன்முத்தனாகிய— நிலைமைபெற்
று-நிலைமையையடைந்து—அகங்காரந்தீர்ந்து- அகம்பாவம்விட்
டு—எனதென்னாமல்-யானெனதென் றுசொல்லாமல்—மேவுமு
ட்டபந்தம்-பொருந்தியவசப்பற்றனைத்து—வீழ்ந்துபோய் - கெட்
டுப்போகி—புந்தியில்-புத்தியில்—விகற்பங்களனைத் துப்போய்-
விகற்பங்களியாவுநீங்கி—பாவமுற்றிய-(ஆத்ம) பாவனைமுதிர்ந்
த—கசனின்றநிலையில்-கசனிருந்தநிலையில்—நீ- ஸ்ரீராமாநீ
—பற்றுதலறநிற்பாய்-இச்சையானதுநீங்கும்படி யிருப்பாய்—
கேவலத்து-கைவல்யத்தில்—இந்தவகங்காரம் - இந்தவகம்பாவ
மானது—பொய்ம்மையாம்-மித்தையேயாகும்— கெடுத்தல்-
இதைவிடுத்தலும்—பற்றுதல்-பிடித்தலும்—வேண்டாம்- உன
க்குவேண்டாம்.—(எ-று) சகலத்திலும் நான் கற்தனல்லவென்
னுந் திடபாவனையினாலே பிரகிருதத்தில் வருகின்ற தொழில்க
ளைச்செய்தாலும் அதினால் பந்தப்படமாட்டான், சு-க, தனது
மனதின்பிரவிர்த்தி யில்லாததினாலே விடயவிராகத்தையடைகிறா
ன்-ஆகையினால் சதாகாலமும் நான் கர்த்தனல்லவென்னும் பாவ
னையினாலே பரமானந்தமென்னு நாமமுடைய அந்த சமயாவ

பிழுதலே—பவந்திர்தல்-சநநந்தீர்தலென்று(வசிட்டமுனி)சொன்னார்.—(எ-று) [இ-உ-க-ம்] அறிவினுண்மையைப்போதித்த கம்பாவத்தைநீக்கினதென்பதாம். (௩௯)

கசன்கதைமுற்றிற்று.

ஆகூ கதை-௬௰அ-இ-கவிதை-(௲அ௱௫௰எ)



# மித்தையாபுருடன்கதை.

(அவதாரிகை)

முற்கதையிலாத்மவிசாரத்திலுதித்த வகங்காரத்யாகமான சகலத்யாகத்தாற் சர்வம் பிரமமயமென் றறிவித்த வ்விசாரமின்றி யகங்காரநீங்காத விடத்திற் றிரிஸ்பருபமா யனுபவிக்குந்துன்பங்களை யறிவிக்கு நிமித்தமகம்பாவவுருவகமாகமித்தையாபுருடன்கதையை நிரூபிக்கிறார்.

(பேதநீங்கியசுயஞ்சித்திற் சுகிப்பாயெனல்-வேறு)

இருமையோ டொருமைநீக்கிநின் றறிலெய்தியின்ப... ... ... *
மருவுவாய்மித்தையானபுருடன்போல்வருந்தவேண்டாங் ... *
குரிசிலேயென வுமெந்தாய் கூறுபொய்ப்புருடனுனே .... *
னொருபயனின் றித்துன்பமுற்றவனுலைந்தவாறென்... .. .. *

(இ-ள்) இருமையோடு-இரண்டுடன்—ஒருமைநீக்கி-ஒன்றையுந்தள்ளி—நின்றறிலெய்தி-இருந்தவாத்மஞானத்தையடைந்து—இன்பமருவுவாய்-(பரம)சுகத்தையடைவாய்—மித்தையானபுருடன்போல்-மித்தையாபுருடனைப்போல—குரிசிலே- ஸ்ரீராமா—வருந்தவேண்டாமெனவும்-வருத்தப்பட வேண்டாமென்று வசிட்டமுனிசொல்லவும்—எந்தாய்-எனதுபிதாவான வசிட்டமுனியே—கூறுபொய்ப்புருடனுனேன்-சொல்லாநின்ற மித்தையாபுருடனுனவன்—ஒருபயனின்றி - ஓர்ப்ரயோசனமுமில்லாமல்—துன்பமுற்று-துயரத்தையடைந்து— அவனுலைந்தவாறென் - அவனலைந்தவிதமென்ன.—(எ-று) (க)

{அகம்பாவநீக்கற்பொருட்டதன்விகாசத்தைச் சாமானியமா யறிவிக்கத்தொடங்கல்.}

ஞானமாமமுதினுலேநலம்பெறநிறைந்ததேனு ........ *

யானறிவுறவித்தன்மையியம்பெனவிராமன்கேட்ப .... *
மானமாவசிட்டன்சொல்வான்வள்ளலேநகைக்குமூல . .... *
மானவிக்கதையான்சொல்வதறவியப்புளதுமன்று.........*

(இ-ள்) ஞானமாமமுதிஞல்-ஞானமாகிய வமுர்தத்திஞல்—நலம்பெற-நன்மையுண்டாக—நிறைந்ததேனும்-நிறைந்ததாறு லும்—யானறிவுற-நானறியும்படியாக— இத்தன்மையியம்பெ ன - இந்தத்தன்மையைச்சொல்லுவாயென்று—இராமன்கேட் ப-இராகவர்கேட்க—மானமாவசிட்டன்சொல்வான்- மாட்சிமை புள்ள வசிட்டமுனியானவர்சொல்லுவார்—வள்ளலே - இராசா வே—நகைக்குமூலமான - சிரிப்புக்குக்காரணமாகிய—இக்க தை-இந்தக்கதையை—யான்சொல்வது-நான்செப்புவது—அ றவியப்புளது-மிகவுமதிசயமுடையது.—(எ-று) (உ)

(சூனியத்திலுண்டானவனகங்காரனெனல்)

ஒருதலத்தேகாந்தத்திலுற்றசூனியத்திலுண்டாய் .... ....*
மருவுமத்தலத்தினிற்போன்மாயையெந்திரமயத்தோர் .... *
புருடனுண்டஞ்ஞானத்தோன்புன்மையாயிளமைப்பண்பாய் *
மிருதுவாம்புந்தியுள்ளோன்கேவலமிகுந்தமூர்க்கன்..... .... *

(இ-ள்) ஒருதலத்து-(சிதாகாசமான)வோரிடத்தில்— எகாந் தத்தில்-(ப்ரபஞ்சமில்லாமற்)றனித்தவிடத்தில்— உற்றசூனியத் தில்-பொருந்தியவிசேடமில்லாத விடத்தில் — உண்டாய்மருவு ம்-உண்டாகிப்பொருந்துகின்ற—அத்தலத்தினிற்போன்-அந்த விடத்திலிருப்பவன்—மாயையெந்திரமயத்து-மாயாயெந்திரம யத்தையுடைய—ஓர்புருடனுண்டு-ஓராண்மகனுண்டு—அஞ்ஞா னத்தோன்-அவனஞ்ஞானத்தையுடையவன்—புன்மையாய்-ஈன மாகியும்—இளமைப்பண்பாய் - குழந்தையின்றன்மையாகியும் —மிருதுவாம்-அற்பமாகியுமிருக்கின்ற—புந்தியுள்ளோன் - புத் தியையுடையவன்—கேவலமிகுந்தமூர்க்கன்-மிகுந்தமூடத்தன் மையையுடையவன்.—(எ-று) (௩)

(சூனியத்தில் வளர்கின்றவனெனல்)

வானிலேசுருண்டுதோன்றுமயிற்சுருண்மருத்தலத்திற் ..... *
கானனின்னவன்றான்றோன்றியேகலந்தபாழிற்... .... ...*
சூனியமலாதொன்றில்லையாதொன்றுதோன்றிற்றங்கே..... .... *
மானவவதுமன்றன்மற்றவன்வளர்வுமாங்கே.............. ...*

(இ-ள்) வானில்-ஆகாயத்தில்—கருண்டுதோன்றும்-கருண்டு தோற்றுகின்ற—மயிர்க்கருள்-மயிர்க்கருளைப்போலவும்— மருத் தலத்தில்-மரீசிப்பூமியிற்றோற்றுகின்ற—கானலீரென்ன-கானற் சலத்தைப்போலவும்—அன்றேல் - அந்தமித்தையாபுருடன்— தோன்றி-உண்டாகி —கலந்தபாழில்-கலந்திருக்கின்ற சூனியத்தி ல்—சூனியமலாது-சூனியமேயல்லாமல்—ஒன்றில்லை-வேறொன் றுமில்லை—அங்கு-அவ்விடத்தில்—யாதொன்று- ஏதொன்று— தோன்றிற்று-உண்டானதோ—மானவ-மனுகுலத்திற் பிறந்தவ னே—அதுவுமன்றன்-அதுவுமந்தமித்தையாபுருடனே— அவ ன் வளர்வுமாக்கு-அவனதுவளர்ச்சியுமவ்விடத்தில்.—(எ-று.)(௪)

(ஆகாயத்தைக்காக்கவோரகங்கட்டல்)

வேறுமாயெப்போதும்விளங்குந்தன்மையவன்காணுன் .. *
கூறுமோர்சங்கற்பங்கூடினன்விண்ணினைப்பேணி .. ... *
யூறுபடாமல்வைகுறுமீதுயர்ந்ததேயென்றுளத்துன்னி .. ..*
தேறுமுவகையுடன்விண்ணைச்சேமிப்பானோர்வீடமைத்தான் .*

(இ-ள்) வேறுமாயே-(ப்ரபஞ்சத்துக்கு) வேறாகவே — எப் போதும்-எக்காலமும்—விளங்குந்தன்மை-ப்ரகாசிக்கின்ற சித் தினொளிசுபாவத்தை—அவன்காணுன்-அவன்பாராதவனாய்— கூ றுமவன்-சொல்லப்பட்டமித்தையாபுருடன்— ஓர்சங்கற்பங்கூடி னன் ஒருசங்கற்பத்தையடைந்து—விண்ணினைப்பேணி-ஆகாய த்தை விரும்பி—ஊறுபடாமல்வைகுறும் - இடையூறில்லாமல் வைப்போம்—ஈதுயர்ந்ததேயென்று-இதுமேலானதேயென்று —உளத்துன்னி-மனதிலெண்ணி—தேறுமுவகையுடன்- திடமா ன சந்தோஷத்தோடும்—விண்ணை-ஆகாயத்தை—சேமிப்பான்- காவல்செய்யும்பொருட்டு—ஓர்வீடமைத்தான் - ஒருவீடுகட்டி னன்.—(எ-று) (௫)

(வீடுகெடவிண்போனதெனவருந்தல்)

அந்தமனையில்விண்ணினைவைத்தளிக்கின்றேமென்றதிலாசை *
பந்தமுறலுமவ்வீடுபடர்காலத்தாலழிவெய்தி .... .... *
யிந்தமருத்தாற்றரக்கம்போலிருதுமுடிவால்வருடம்போற் .. *
சிந்திபொழியவவன்கண்டுசேண்போயினதென்றலறுற்றான் . ..*

(இ-ள்) அந்தமனையில்-அவ்வீட்டில்—விண்ணினைவைத்து-ஆ காயத்தைவைத்து—அளிக்கின்றேமென்று- காக்கின்றேமென் று—அதில்-அவ்விண்ணில்—ஆசைபந்தமுறலும்- இச்சைகட்டு

ப்படவும்—அவன்வீடு- அவன்மனையானது—படர்காலத்தால்-வெகுகாலத்தினால்—அழிவெய்தி- நாசமடைந்து—இந்தமருத்தாற்றரங்கம்போல்- இந்தக்காற்றினாலலையுமலையைப்போலவும்—இருளுமுடிவால்-சாரிதுவினந்தத்தினால்—வருடம்போல்- மழையைப்போலவும்— சிந்திவொழிய-. கெட்டுப்போக—அவன் கண்டு - அந்தமித்தையாபுருடன்பார்த்து—சேண்போயினதென்று-ஆகாயம்போய்விட்டதென்று—அலறுற்றான்- அழத்தொடங்கினான்—(எ-று) (௬)

(மனைகெடவிண்ணைக்கூபத்தில்வைத்தல்)

நில்லாவீட்டில்விண்ணேயோநீயெங்ககன்றாயொருகணத்தி- ...*
லல்லாயானுயெனவீட்டினாகாசத்துக்கறம்புலம்பி..............*
பொல்லாமனத்தான்மீண்டங்கோர்புதியகிணறுசமைத்தொருவர், கொல்லாதிதனிலிருத்துமெனக்கூபாகாசபரனானான்.......*

(இ-ள்) வீட்டினில்லா-மனையிலிராமல்—விண்ணேயோ - ஆகாயமே—ஒருகணத்தில்-ஒருக்ஷணத்தில்—நீயெங்ககன்றாய்- நீயெங்கேபோனாய்—அல்லாயானுயென- இல்லாததானாயென்று—வீட்டினாகாசத்துக்கு-கிறகாகாயத்துக்கு—அறப்புலம்பி மிகவுமழுது—பொல்லாமனத்தால்- கொடியமனதினால்—மீண்டங்கு-திரும்பவுமவ்விடத்தில்—ஓர்புதியகிணறுசமைத்து- ஒருநூதனமானகூபத்தையுண்டாக்கி—ஒருவர்கொல்லாது - ஒருவருங்கெடுக்காமல்—இதனிலிருத்துமென - இதனிடத்தில்வைப்போமென்று—கூபாகாசபரனானான்- கிணற்றுகாயத்திற்பற்றுள்ளவனானான்—(எ-று) (௭)

(கிணறுகிடவிண்ணுக்கிரங்கிக்கும்பாகாயத்தடைத்தல்)

காலமதனாற்கூபந்தான்கழிதலோடுங்கதறுற்றான்..............*
சாலவருந்திமீண்டங்கேதனைக்காப்பதற்கோர்குடம்பண்ணிச்..*
கோலமுடையதெனமகிழ்ந்துக்கும்பாகாசபரனானா.........;...*
னீலமுகிலேயக்குடமுநிகழ்காலத்தாலுடைந்ததுவே...........*

(இ-ள்) காலமதனால்-சிலகாலத்தினால்—கூபந்தான்- கிணறானது—அழிதலோடும்-அழிந்தமாத்திரத்தில்—சாலவருந்தி-மிகவுந்துன்பற்று—கதறுற்றான்-கதறினான்—மீண்டு - திரும்பவும்—அங்கதனைக்காப்பதற்கு- அவ்விடத்திலவ்வாகாயத்தையிரட்சிப்பதற்கு—ஓர்குடம்பண்ணி - ஒருகுடத்தைச்செய்து—கோலமுடையதென-அழகையுடையதென்று—மகிழ்ந்து - சந்தோ

ஷித்து — அக்கும்பாகாசபரனானவன் - அக்கடாகாயத்திற்பற்றுள்
ளவனானவன் — நீலமுகிலே - கறுத்தமேகம்போன்றஸ்ரீராமா — அ
க்குடமும் - அக்கலசமும் — நிகழ்காலத்தாலுடைந்தது - நடக்குங்
காலத்தாலுடைபட்டது — (எ-று) (அ)

(கும்பங்கெடவவ்விண்ணுக்கிரங்கிக்குண்டத்திலடைத்தல்)

நம்பிநம்பியடைந்ததெலாநாசமெய்தத்திருவிலியக் ............ *
கும்பவிண்ணுக்கழுததற்பின் குண்டமொன்றங்கேகெலித் · *
தம்பமென்றுதற்பரனைச்சார்ந்தானந்தக்குழியினையுந் ........ *
தும்பிகாலமழித்துளதாற்றன்னுமிருளைச்சுடர்போல ........ *

(இ-ள்) நம்பிநம்பி - மிகவுநம்பிக்கையுற்று — அடைந்ததெ
லாம் - பெற்றவனைத்தும் — நாசமெய்த - கெட்டுப்போக — திரு
விலி - செல்வமற்றமித்தையாடருடன் — அக்கும்பவிண்ணுக்கழு
து - அந்தக்கடாகாயத்துக்குப்புலம்பி — அதற்பின் - அதன்பின்
பு — குண்டமொன்று - ஒருகுழியை — அங்கேகெலி - அவ்விடத்
திற்றோண்டி — தம்பமென்று - நிலையென்று — தற்பரனைப் - அக்கு
ண்டாகாயத்திற்பற்றுள்ளவனைப் — சார்ந்தான் - அடைந்தான் —
அந்தக்குழியினையும் - அப்பள்ளத்தையும் — தன்னுமிருளை - நெ
ருங்கியவிருட்டை (க்கெடுக்கின்ற) — சுடர்போல - ப்ரகாசத்தை
ப்போல — தும்பிகாலமழித்துளது - யானையாகியகாலமழித்த
து — (எ-று.) (௯)

{குண்டங்கெடவவ்விண்ணுக்கிரங்கிநாற்சாரகங்
கட்டியதில்வைத்தல்.}

குண்டவிண்ணுக்கழுததற்பின் சூலவுநாற்சாரகங்கட்டி ...... *
மண்டுமருள்கூர்தற்பரனாய்வாழ்ந்தானந்தமனைதனையு ........ *
மண்டமுழுதுங்கொல்காலமழிவுசெய்யவதற்கழுது ........... *
சண்டபவனலிடைப்பட்டசருகுபோலத்தளர்ந்துலைந்தான் .... *

(இ-ள்) குண்டவிண்ணுக்கு - குழியாகாசத்துக்கு — அழுதத
ற்பின் - புலம்பினபின்பு — நாற்சாரகங்கட்டி - வளைவானநாற்சாரி
மனையைக்கட்டி — மண்டுமருள்கூர் - அளவற்றகிருபையமிகுந்த —
தற்பரனாய்வாழ்ந்தான் - அதுபற்றுள்ளவனாகவாழ்ந்தான் — அந்
தமனைதனையும் - அந்தவீட்டையும் — அண்டமுழுதும் - அண்டங்
களையெல்லாம் — கொல்காலம் - அழிக்கின்றகாலமானது — அழி
வுசெய்ய - கெடுக்க — அதற்கழுது - அதற்குவிசனப்பட்டு — சண்
டபவனலிடைப்பட்ட - பெருங்காற்றிலகப்பட்ட — சருகுபோ

ல-உலர்ந்தவிலையைப்போல—தளர்ந்துலைந்தான் -சோர்வுற்றலை
ந்தான்—(எ-று) (௰)

(நாற்சாரகங்கெடவதற்கிரங்கிக்குதிர்செய்தமைத்தல்)

தடனூர்நாற்சாற் கழுததற்பின்றற் காப்பதற்கோர் குதிர்பண்
ணி, யிடனூர்குதிர்புக்கவனிருப்ப விதுவு காலனிறப்பித்தா...*
னுடனேகுதிர்வினணினுக்கழுதாவொன்றேவீடுகுதிர்குண்டங்,
குடநாற்சாரமெனப்பவற்றாற்குறைவில்காலநதுயருற்றான் .... *

(இ-ள்) தடனூர்நாற்சாற்கு-விசாலமுள்ள நாற்சாரியாகாயத்
துக்கு—அழுததன்பின்-இரங்கினவதன்பின்பு— தற்காப்பதற்
கு அந்தவாகாயத்தைக்காவல்செய்வதற்கு—ஓர்குதிர்பண்ணி-ஒ
ருகுதிரைச்செய்து—இடனூர்குதிர்புக்கு-விசாலமுள்ள குதிரிற்
பிரவேசித்து—அவனிருப்ப-அவனிருக்க—இதுவும் - இக்குதி
ரையும்—காலனிறப்பித்தான்-காலனழிப்பித்தான் — உடனேகு
திர்வினணினுக்கழுதான் - உடனேகுதிராகாயத்துக்கலறினான்
—ஒன்றே-ஒன்றுதானே—வீடும்-வீடாகாயமும்—குதிர்-குதி
ராகாயமும்— குண்டம் குழியாகாயமும் —குடம்-கடாகாயமு
ம— நாறசார-நாற்சாராகாயமும்—என்பவற்றால்-என்கின்ற வி
வைகளினால்—குறைவில்காலம்-வெகுகாலம்— துயருற்றான்-து
ன்பத்தையடைந்தான்.—(எ-று) (௰௧)

(இதுவுமது)

விண்ணைவீட்டிலடைத்தவனாய்வீட்டில்விண்டான்றானாகி......*
யுண்ணையுற்றபெருந்துயராலுழைக்கும்பிழைக்குமோரொருகா
லெண்ணிநிற்பதிதுபோவதிதுவென்றறியானிவனென்று......*
புண்ணியத்தின்வடிவானோன்புகலவீரன்புகலுற்றான்... .... *

(இ-ள்) விண்ணை-ஆகாயத்தை—வீட்டிலடைத்தவனாய்-கிரக
த்திலடைத்தவனாய்—வீட்டில்விண்டான் - கிரகாகாயமானது—
தானாகி-தன்மயனாய்—உண்ணையுற்ற-மனந்தளர்வையடைந்த—
பெருந்துயரால்-மிகுந்ததுக்கத்தினால்—ஓரொருகால்- ஒவ்வொ
ருகாலத்தில்—உழைக்கும்-உழைப்பவனாகவும்—பிழைக்கும்-பி
ழைப்பவனாகவும்—எண்ணி-நினைத்து—நிற்பதிது - இருப்பதி
து—போவதிதுவென்றறியான்- நசிப்பதிதுவென்றறியாத—இ
வன்-இந்தப்புருடன்—அறியானென்று-தெரியாதவனென்று—
புண்ணியத்தின்வடிவானோன்புகல-தருமரூபியான வசிட்டமுனி
சொல்ல—வீரன்புகலுற்றான்-ஸ்ரீராமன்சொல்லத்தொடங்கினர்

(எ-று) [இ-௰உ-க-ம்] வீடுமுதலியனவகண் மரித்தலை விண்ணி றந்ததாக நினைத்து வருந்தினதென்பதாம்.                (௰உ)

(இத்திருஷ்டாந்தத்தி னபிப்பிராயங்கூறத்தொடங்கல்)

பொய்யாமனிதன்கதையாலென்புகன்றாய்மாயாபுருடனையே ✻
யையாவிவன்விண்காத்தானென்றறைந்ததேதென்றருள்கென்ன
மெய்யாம்வசிட்டனுரைசெய்வான்மித்தாபுருடனென்றவிவன் ✻
மையார்முகிலேசூனியமாம்வானிலெழுந்தவகங்கரமே. .... ....✻

(இ-ள்.) பொய்யாமனிதன்-மித்தையாபுருடனுடைய—கதை யாலென்புகன்றாய்- கதையினாலென்னசொன்னீர்— ஐயா-ஆ சாரியரே—மாயாபுருடனை- மித்தையாபுருடனை— இவன்விண் காத்தானென்று- இவனாகாயத்தைக் காவல்செய்தானென்று— அறைந்ததேதென்று-சொன்னதெதுவென்று— அருள்கென்ன -அருள்செய்வாயென்றிராமன்கேட்க —மெய்யாம்- உண்மையா ன—வசிட்டனுரைசெய்வான்- வசிட்டமுனிசொல்லுவார்—மித் தாபுருடனென்றவிவன்- மித்தையாபுருடனென்று சொல்லியவி வன்—மையார்முகிலே- கரியநிறத்தையுடையமேகம்போன்றவ ரே—சூனியமாம்வானில்- சூனியவாகாயத்தில்—எழுந்தவகங்கர மே-உண்டானவகங்காரமாம்.—(எ-று)                (௰௩)

(இதுவுமது)

இந்தவுலகெல்லாமிருக்குமிந்தவிண்ணேதுநிறைவுற் ... ...✻
றந்தமின்றிச்சிருட்டிதனக்காதிதனிற்றானேநிற்கு.... .........✻
மைந்தவதன்பாலகங்காரமருத்திற்பரிசம்வருவதுபோன் [ன்
முந்துதோன்றித்தனைக்காக்கமுயன்றான்வடிவாய் முளையாதோ

(இ-ள்) இந்தவுலகெல்லாமிருக்கும்-இச்சகங்களனைத்து மிரு க்கின்ற—இந்தவிண்ணேது-இவ்வாகாயமெதுவோ — அதுநி றைவுற்று-அதுபூரணமாய்—அந்தமின்றி-முடிவில்லாததாய்— சிருட்டிதனக்காதிதனில்-சிருட்டிக்குமுன்னமே— தானேநிற்கு ம்-சுயமாகவேயிருக்கும்—மைந்த-குழந்தாய்—அதன்பால்-அ தனிடத்தில்—அகங்காரம்-அகம்பாவமானது— மருத்திற்பரிச ம்வருவதுபோல் - காற்றிற்பரிசமுண்டாவதுபோல — முந்து தோன்றி-முன்னமேயுண்டாகி—தனைக்காக்க- (சிதாகாசமான) வாத்மாவைக்காப்பதற்காக—வடிவாய்முளையாதோன்- சூனிய மானவகங்காரன்—முயன்றான்-முயற்சித்தான்.—(எ-று) (௰௪)

(இருவமது)

கூவங்குண்டங்குடநாற்சார்குதிரென்பனவாங்குரம்பைகளை.. *
மேவநாநாவிதமாகவிதித்துமீண்டுமீண்டிழந்து ... ... .... *
தாவமுற்றானுடற்றோறுந்தனைக்காத்தனனென்றுகாச...... ...*
பாவனைக்கேநிலைப்பட்டான்பாழேவருந்திப்பதைத்தனனால்...*

(இ-ள்) கூவம்-கிணறும்—குண்டம்- குழியும்—குடம்- கடமும்—நாற்சார்- நாற்சாரியும்—குதிர்-குதிரும்— என்பனவாம்-என்றுசொல்லப்பட்டனவாகிய—குரம்பைகளைமேவ - சரீரங்களைப்பொருந்த—நாநாவிதமாகவிதித்து-பலவிதமாகவுண்டாக்கி—மீண்டுமீண்டிழந்து-திரும்பத்திரும்பவிழந்து— தாவமுற்றான்-துன்பமடைந்தான்—உடற்றோறும்-சரீரங்கடோறும்— தனைக்காத்தனனென்று-(சிதாகாச) வாத்மாவைக் காவல்செய்தேனென்று— ஆகாசபாவனைக்கு-(பூ)தாகாயபாவனைக்கு— நிலைப்பட்டான்-நிலையானான்—பாழேவருந்தி-வீணாகவருந்தப்பட்டு—பதைத்தனன்-பதைபதைத்தான்.—(எ-று) (௰௫)

(இருவமது)

விண்ணானென்றேசேமித்துவீட்டாகாசமாதிகளி... ... .. ...*
னண்ணுமெலிவுற்றிடுமித்தையான்போல்வருந்தா தொழிகமலர்
கண்ணாவிண்ணின் மிகப்பெரிதாய்க்களங்கமற்றுநுண்ணியதா [க்
யெண்ணாலடங்காவழிவில்சிவமியலாத்துமதத்துவந்தானே .. *

(இ-ள்) விண்ணானென்று - (பூ) தாகாயத்தைநானென்று—சேமித்து-காவல்செய்து—வீட்டாகாசமாதிகளின் - கிரகாகாசமுதலானவைகளில்— நண்ணுமெலிவுற்றிடும்-பொருந்தித்தளர்வடைகின்ற—மித்தையான்போல்-மித்தையாபுருடனைப்போல—மலர்க்கண்ணா-தாமரைக்கண்ணனான ஸ்ரீராமா— வருந்தாதொழிக-துன்புறுமனீங்கக்கடவாய்—விண்ணில்- ஆகாயத்திலும்—மிகப்பெரிதாய்-மிகவும்வியாபகமாகியும்—களங்கமற்று-மாசில்லாததாகியும்—நுண்ணியதாய்-சொச்சமாகியு மிருக்கின்ற—எண்ணாலடங்கா-நினைவினாலடங்காத—அழிவில்சிவம்-அழிவற்ற சிவமே—இயலாத்துமதத்துவந்தான்-சுபாவமானவாத்மதத்துவமாம்.—(எ-று) [இ-ச-க-ம்] உள்ளதானசிதாகாயத்தி லில்லாததா யுதித்த வகம்பாவமே மித்தியாபுருடன், சிதாகாயத்தைக் காக்கநினைத்தல் விண்காக்கநினைத்தல் தேவர்முதலிய சரீரங்கள் வீடுமுதலியன சநநமரணமே, அவைகளுண்டாகியழிதல் நீங்காத சிதாகாய நீங்கினதாக விரங்குதலே வீணாகக் கதறினனெ

னக்கூறி யிவ்வகம்பாவத்தால் வருந்தாமற் சிவஸ்வரூபமாய் விள
ங்குவாயென்பதாம். (௰௬)

(தேகநீங்கினுஞ்சித்து நீங்காதெனல்.)

அவ்வாற்றுமதத்துவங்காணலாமோவெவர்க்குமகப்படுமோ. *
இவ்வாறிருக்கவுடலிறந்தாலிதயாகாசமாத்திரத்தை........ *
வெவ்வாளரசேநானிறந்தேனென்றுமெலிவர்விவேகயிலோர்...*
தவ்வாவிசும்புகடாதிகடான்றகர்ந்தபோது தணந்திடுமோ. .... *

(இ-ள்) அவ்வாற்றுமதத்துவம்- அந்தவாற்றுமதத்துவமான
து—காணலாமோ - தரிசிக்கப் படுமோ—எவர்க்கு மகப்படு
மோ-யாவர்க்குங்கிடைக்குமோ—இவ்வாறிருக்க- இப்படியிருக்க
—உடலிறந்தால்-சரீரமரித்தால்—இதயாகாசமாத்திரத்தை - இ
தயாம்பரமாத்திரமானவை—வெவ்வாளரசே- கொடியவாளாயு
தத்தையுடையவரசனே—நானிறந்தேனென்று - யானிறந்து
போனேனென்று— விவேகயிலோர்- விவேகமற்றவர்கள்—மெ
லிவர்-தளருவார்கள்— தவ்வாவிசும்பு - தவிராதவாகாயமான
து—கடாதிகடான்-கடமுதலியவைகள்—தகர்ந்தபோது - கெட்ட
போது—தணந்திடுமோ-நீங்கிப்போமோ (எ-று) (௰௭)

(தானென்பது நிறைந்து நானென்பதிறக்குமெனல்)

குடமதுடைந்தால்விண்பிரியாக்காயமழிந்தாலுயிரழியா.....*
திடவிதாஞ்சின்மாத்திரமாய்ச்சத்தாய்விண்ணினுண்ணியதாய்த்.
தொடருமணுவுக்கணுவாகுஞ்சுரூபமைந்தா நானென்று....*
படருமனுபூதியினளவேபயிலுங்குடம்போனசித்திடுமால்.....*

(இ-ள்.) குடமதுடைந்தால்-குடமுடைந்தால்— விண்பிரியா-
ஆகாயமானதுபிரியமாட்டாது—காயமழிந்தால்-சரீரநசித்தா
ல்—உயிரழியா-ஆத்மாவானதழியமாட்டாது—திடவிதாஞ்சின்
மாத்திரமாய்- பெருமைபொருந்தியசின்மாத்திரமாகியும்—சத்
தாய்-சத்தாகியும்— விண்ணினுண்ணியதாய்- ஆகாயத்திலுஞ்சூ
க்ஷுமமாகியும்—தொடருமணுவுக்கணுவாகும்- தொடராநின்ற
வணுவுக்கணுவாகியுமிருக்கின்ற— சுரூபம்- பிரமஸ்வரூபமான
து— மைந்தா-குழந்தாய்— அனுபூதியினளவேபடரும்- அனு
பூதியின்மட்டேவியாபிக்கும்—நானென்றுபயிலும்- யானென்
றுசொல்லிய (வகங்காரமானது)—குடம்போனசித்திடும்- குடத்
தைப்போலழியும்—(எ-று.) [இ-உ-க-ம்] வீடுமுதலியவைகண்
ணீக்கினுமதில்கட்டப்பட்டதுபோலத் தோற்றியகிரகாகாச முதலாக

ச்சொல்லுஞ் சத்தமிறந்ததேயன்றியகணருத்தமானபூதாகாசமி
றவாததுபோலத்தேகாதிகணசிக்கினு மதிற்பந்தப்பட்டதுபோ
லத்தோற்றினசத்தரூபமானசிதாபாசனுடைய வகம்பாவநீங்குவதே
யன்றியதனருத்தமானசித்து நீங்காவென்பதாம். (௰௮)

(செகத்துருவஞ்சித்தேயெனல்.)

யாதுமென்றுமெவ்விடத்துமிறத்தல்பிறத்தலிலதாகு.............*
மோதுமிந்தரூபத்தாலுலகாய்ப்பிரமமேவளரு.............*
மாதலாலிவ்வுலகெல்லாமடியுமுடியுநடுவுமறப்.............*
பேதமறப்பாவாபாவம்பிறவாய்பொருளென்றிடர்தீர்வாய்...*

(இ-ள்.) யாதும்-எதுவும்—என்றும்- எப்போதும்—எவ்விடத்தும்-எந்தவிடத்திலும்—இறத்தல்-மரித்தலும்—பிறத்தல்-செனித்தலும்—இலதாகும்-இல்லாததாகும்—ஓதுமிந்தரூபத்தால்-சொல்லப்பட்ட இவ்வுருவத்தினால்—உலகாய் - சகமாய்—பிரமமேவளரும் பிரமமேவிர்த்தியடையும்—ஆதலால்- ஆதலில்—இவ்வுலகெல்லாம்-இச்சகங்களனைத்தும்—அடியும்- ஆதியும்—நடுவும்-மத்தியும்—முடிவுமற- அந்தமுமில்லாமலும்—பேதமற-பேதாபேதமில்லாமலும்—பாவாபாவம்பிறவா - பாவமுமபாவமுமுண்டாகாமலுமிருக்கின்ற—பொருளென்று - பரவஸ்துவென்றெண்ணி—இடர்தீர்வாய்- துன்பநீங்குவாய்—(எ-று.) (௰௯)

(அகம்பாவத்தையறிவிற்கெடுக்கவேண்டுமெனல்)

ஆபத்துக்கெல்லாநிலையமநித்தமவசமவிவேகம்..........*
பாவத்துக்குமுதன்மடமைப்பவவித்தழிவைப்பற்றியது......*
தாபத்துக்கோரிடமானதகவிலகங்காரந்தனை..........*
நீபற்றில்லாவறிவாலேநீக்கிலதுவேநிமலநிலை..........*

(இ-ள்.) ஆபத்துக்கெல்லாம்- ஆபத்துக்களனைத்திற்கும்—நிலயம்-இடமாகியும்—அநித்தம்-அநித்தியமாகியும்—அவசம்-வசமில்லாததாகியும்—அவிவேகம்- விவேகமில்லாததாகியும்—பாவத்துக்குமுதல்-பாவங்களுக்குமுதலாகியும்—மடமை-அஞ்ஞானமாகியும்—பவவித்து-சநநபீசமாகியும்—அழிவைப்பற்றியது- நாசத்தையுடையதாகியும்—தாபத்துக்கோரிடமான-துன்பத்துக்கோர்வித்தாகியுமிருக்கின்ற—தகவிலகங்காரந்தனை-அறிவற்றவகம்பாவத்தை—நீபற்றில்லாவறிவால் - இராகவிச்சையற்றவாத்மஞானத்தினால்—நீக்கில் - கெடுப்பாயானால்—அதுவே-அவ்(வகங்காரமிறந்த)விடமே—நிமலநிலை-நிர்மலமான

ஜீவன்முத்திப்பதமாம்—(எ-று.) [இ-உ-க-ம்] சித்தேசகத்தாய் விளங்குமென்றறியினஃதையானென்னு மகம்பாவநீங்கிச் சர்வமுந்தானாகவேவிளங்குமென்பதாம். (உ௰)

மித்தையாபுருடன்கதை முற்றிற்று.

ஆக கதை - ருக இ - கவிதை - ௩அளஎ.





# விரதஞானயகதை.

(அவதாரிகை.)

முற்கதையி லகம்பாவத்தான் வீணாகவருந்துவதை நிஷ்டாந்தப் படுத்தியஃது நீக்கிற்சர்வம்பிரமமயமாய்விளங்குமென்பதை யறிவித்திவ்வனுபவமியாவர்க்குஞ்சான்று நானேயென்னும ஹாகர்த்தத்வமுதலியவற்றால் விளங்குமென்பதையறிவிக்குநிமித்தம் விரதஞானயகதையை நிரூபிக்கிறார்.

(சிற்ப்ரகாசமேசகத்தாகவிளங்குமெனல்.)

ஆதலாற்காண்பவத்தினுண்மைநிலையிப்படியேயறிவில்வையம்*
பேதமாய்வேறொன்றிற் பிறந்ததிலைக் கயிற்றிலராப் பிறப்பதே
போ; லாதபனில்வேறிலையாதபமென்றேபாவித்தோர்க்காதபந்
தான்;பேதமறவாதபனும்பேணுநிருவிகற்பமிது பேசுங்காலே.

(இ-ள்) ஆதலால்-ஆதலினால்—காண்பவற்றினுண்மைநிலை-சுகத்திநிச்சயமானது—இப்படியே - இந்தப்ரகாரமேயாகும்—அறிவில்-ஆத்மஞானத்தில்—வையம்-சகமானது—கயற்றிலராப்பிறப்பதேபோல் - ரச்சுவிற்சர்ப்பமுண்டாவதுபோல(வுதித்ததேயன்றி)—பேதமாய் - வேற்றுமையாக—வேறொன்றிற்பிறந்ததிலை-மற்றொன்றிலுண்டானதில்லை—ஆதபனில்- சூரியனைவிட—ஆதபம்-கிரணமானது—வேறிலையென்று- வேறில்லையென்று—பாவித்தோர்க்கு-பாவனைசெய்தவர்களுக்கு—ஆதபந்தான கிரணமே—பேதமறவாதபனும்-வேற்றுமையில்லாமற்சூரியனும்—பேசுங்கால்-சொல்லுமிடத்தில்—இதுபேணுநிருவிகற்பம்-இதுவேவிரும்பப்பட்டநிருவிகற்பமாகும்—(எ-று) (க)

(அபேதானுபவமுரைத்தல்)

பொன்னில்வேற்றுமையன்று கேயூரமெனநினையிற்பொன்னொ
ன்றேயா, மின்னதேநிருவிகற்பமென்பராலிரவிவெயிலென்று
நாடின், மின்னுகதிரிரவிக்கும்வறுபோலாங்கண்டாய்விவிதமா
கத், துன்னுநாநாத்துவம்விட்டறிவநிலா நல்லறிவிற்றுணிந்துநி
ற்பாய்...................................................... *

(இ-ள்) பொன்னில்-கனகத்துக்கு—கேயூரம்- தோளணியா
னது—வேற்றுமையன்றெனநினையில் - வேறுபாடல்லவென்று
பாவிக்கில்—பொன்னொன்றேயாம்-தமனியமொன்றேயாம்
—இன்னது-இவ்வபின்னத்தையே—நிருவிகற்பமென்பர்
விகற்பமென்றுசொல்லுவார்கள்—இரவி- சூரியனென்
வெயிலென்று-கிரணமென்றும்—நாடில்-வேறாகநாடினால்—மி
ன்னுகதிர்-ப்ரகாசிக்கின்றகிரணத்துக்கும்—இரவிக்கு- சூரிய
க்கும்—வேறுபோலாங்கண்டாய்-வேற்றுமையைப்போலத்தோ
ற்றும்—விவிதமாகத்துன்னும்-நாநாவிதமாகநெருங்கிய— நா
நாத்துவம்விட்டு-பலவிதங்களையும்விட்டு—அறிவநிலா- சகமில்
லாத—நல்லறிவில்-அனுபூதிஞானத்தில் — துணிந்துநிற்பாய்-
(ஸ்ரீராமா) நீதெளிந்திருப்பாய்.—(எ-று) [இ-உ-க-ம்] கிரண
மென்று மாபரணமென்றும் வேறுபிரித்துப்பாராமற்சூரியனா
கவும் பொன்னாகவும் பார்க்கி னவைகளாய்விளங்குவதுபோலச்
சகத்தை வேறுபிரித்துப்பாராமற் சின்மாத்திரமாகப்பார்க்கி ல
ஃதாகவே யாவும் விளங்குமென்பதாம். (உ)

(பிரமசங்கற்பமே மனமுதலியசகமாகத்தோற்றுமெனல்)

சங்கற்பமெனும்புரணசத்தியினைத்தற்பரமந்தானேதன்னாற் *
பொங்குற்றவாயுவலைவைச்செய்யுமாறுபோற்புரிந்தபோது *
சங்கற்பவிரியுருவாயயல்போலாய்ச்சகவடிவாய்த் தனைத்தானாடி
ப், பொங்குற்றமனமாகுஞ்சங்கற்பமயமாமிட்புவியைக்காண்க.

(இ-ள்) சங்கற்பமெனும்-சங்கற்பமென்கின்ற—புரணசத்தி
யினை-சலனசத்தியை—தற்பரமந்தானே-பிரமமே — பொங்கு
ற்றவாயு-மிக்குற்றகாற்றானது— அலைவைச்செய்யுமாறுபோல்-
சலனத்தைச்செய்யுந்தன்மையைப்போல—தன்னாற்புரிந்தபோ
து-தன்னாற்சங்கற்பித்தபொழுதில்—சங்கற்பம் - அச்சங்கற்ப
மானது—விரியுருவாய்-பரந்தவடிவமாகி — அயல்போலாய்-
வேறுபோலாகி—சகவடிவாய்-உலகத்துருவமாகி— தனைத்தானா
டி-தன்னைத்தானேபார்த்து—பொங்குற்றமனமாகும்-பொலிவு

ள்ளமனமாகும்—சங்கற்பமயமாம்- (அதன்) சங்கற்பமயமாக —இப்புவிதனைக்காண்க-இச்சகத்தைப்பார்க்கக்கடவாய். (எ-று)

{ அனுற்வாச்சியமான சகத்துமுதலிய சர் வமும் பிரமமாகவேவிளங்குமெனல். }

தெரிபொருளென்றுளதல்லபொய்யுமலசொற்பனத்தின் றிரள் போற்றோன்றுந், தெரிபவன்கேட்போன்சொல்வோன் பரிசிப் போன்மணங்கொள்வோன்செல்வே ன்மீள்வோன், பரிவனவெ ல்லாந்தானேபுதிதாகுமலவெல்லாம்பொருளென்றோர்வாய், புரி தருநின்றொழிலெல்லாமலமறுசின்மாத்திரமாம் பொருளேகண் டாய். *

(இ-ள்) தெரிபொருள்-சகமானது—என்று-எப்போதும்—உளதல்ல-சத்தியமுமல்ல—பொய்யுமல - அசத்தியமுமல்ல—சொற்பனத்தின்றிரள்போல் - கனவின்கூட்டத்தைப்போல—தோன்றும்-தோற்றும்—தெரிபவன்-காண்பவனும்—கேட்போன்-கேட்பவனும்—சொல்வோன்-பேசுபவனும்— பரிசிப்போன்-பரிசிப்பவனும்—மணங்கொள்வோன்- வாசனைகொள்ளுபவனும்—செல்வோன்-நடப்பவனும்—மீள்வோன்-திரும்புபவனும்—பரிவனவெல்லாந்தான்-சொல்லப்பட்டசகலமும்— புதிதாகுமல - நூதனமாகவுண்டானதல்ல—எல்லாம்பொருளென்று-சகலமுமுண்மையென்று—ஓர்வாய்-அறிவாய்—புரிதரும்- செய்கின்ற—நின்றொழிலெல்லாம்- உனதுசெய்கைகளனைத்தும்—மலமறு-களங்கமற்ற—சின்மாத்திரமாம்பொருளே- ஞானமயமானவஸ்துவேயாம்.—(எ-று) [இ உ-க-ம்] சைதன்யந்தனது ல்லாசத்தினாற் றானேசகமுதலியவைபோலத் தோற்றிமகிழ்தலே யன்றி வேறின்றெனபதாம். (ச)

(சைதன்யவியாபக முரைத்தல்)

பெரும்பெரியவடிவானபிரமமேயாதலாற்பிறிதொன்றில்லை * வருபொருளெல்லாமறிவின்சனதையாயிருத்தலிவ் வையமெல் லாங், கரும்புடலேயறிவேயாங் கற்பனைவேறில்லையாற் காணப்ப ட்ட, வரும்பொருள்கடனிலறிவுண்டாதலினாலறிபொருளாமனை த்துமில்லை. *

(இ-ள்) பெரும்பெரியவடிவான-மகத்துக்கு மகத்துருபமான து—பிரமமேயாதலால்- பிரமஸ்வரூபமேயாதலால் — பிறிதொன்றில்லை-(சகத்தென்பது) வேறொன்றுமில்லை— வருபொருளெல்லாம்-வராநின்றவஸ்துக்களனைத்தும்—அறிவின்கனதை

